


உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சைவ சமயாசாரியர்
# நால்வர் சரித்திரம்



தேவகோட்டை
சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள்
...கியது



...ச - தை
1974

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவ சமயாசாரியர்

# நால்வர் சரித்திரம்



தேவகோட்டை

## சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள்

எழுதியது



பிரமாதீச - தை

1974




உ
சிவமயம்
திருவம்பலம் உடையார் துணை

காஞ்சி தொண்டைமண்டலாதீன குருமகா சந்நிதானம்

# சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளிய

## முன்னுரை

நம் தமிழகம் தொன்றுதொட்டுப் பழைய வைதிக சைவத்தைப் போற்றிக் கடைப்பிடித்த சிறப்பை உடையது. இந்நாளில் அதை மறந்து விட்டது. சைவர்க்கு நல்ல நூல்கள் பண்டுபோல் இன்று கிடைப்பதில்லை. மறந்ததற்கு இதுவும் ஒரு குறி. இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள நகரத்துச் செட்டிமகார்கள் சைவத்தைப் போற்றி வளர்ப்பதிற் கண்ணுங் கருத்தும், உலகம் பெரிது வியந்து எண்ணும் பேரளவில் வாய்ந்தவர்கள். வீடுதோறும் திருவிளையா

டற் புராணமும், பெரிய புராணமும் வேறு சில சிறந்த சைவ நூல்களும் பாராயணம் செய்யப்பட்டு வரும். பாடங்கேட்டுப் பொருளின்பத்திற் பேரீடுபாடுள்ளவர் பலர் இருந்தனர். வன்றொண்டச் செட்டியார், சொக்கலிங்க ஐயா முதலியோர் தமிழகம் போற்றும் பெரும் புலவர்கள். இந்நூற்றுண்டிலிருந்த இருமொழிப் பெரும்புலவர் மகா மகோபாத்யாய கதிரேசச் செட்டியாரை உலகறியும்.

இந்நாளில் நம் மதிப்பிற்குரியவரும் முதுகவியாய பின்னரும் தம் அடக்கத்தைத் தோற்றும் வண்ணம் பாலகவியெனப் பார் புகழ வாழ்பவரும், சமயம், விசேடம், நிருவாணம் என்னும் மூன்று தீக்ஷைகளும் ஆசாரியாபிடேகமும் பெற்றுத் தத்புருட தேசிகர் என்று தீக்ஷாநாமம் வாய்ந்து திகழ்பவரும், பழைய, புதிய, தமிழ் நூல்களைக் கற்றுணர்ந்த நல்லிசைப் புலவரும் சிறந்த சொற்பொருட் பொழிவினரும், சிவபூஜையைச் சிவாகம விதிப்படி செய்தும் தன் சீடர்களைச் செவ்விதிற் செய்வித்தும் வரும் இருஞ்சீர் உற்றவரும்,

தேவகோட்டைச் சிவாகம சங்கத்தில் சித்தாந்த சாத்திரங்களை மரபு வழாது போதித்து வளர்ப்பவரும், திருச்சிராப் பள்ளி முதலிய நகரங்களில் சித்தாந்த வகுப்புக்கள் நடாத்திச் சைவபோதம் செய்வாரும் ஆகிய உழுவலன்பர் வயிநா-கரம் சிவஸ்ரீ வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் முற்கூறிய புலவர் நிரலில் வைத்துப் பலரும் போற்ற வீற்றிருக் கின்றார்கள்.

அவர்களைத் தருமையாதீனமும் குன்றக் குடியாதீனமும், மதுரையாதீனமும் சைவப் புலவராக ஏற்றுப் பாராட்டியதே அதற்குச் சான்றாகும். சித்தாந்தப் புலவர் மாமணி என்னும் பட்டம் பெறுதற்கு முன்னரே தரு மையாதீனத்து வெளியீடாகிய ஞானசம்பந் தம் அவர்கள் எழுதிய ''பிராசாதயோகம்'' என்னும் பெறலருங் கட்டுரையைக் கொண்டு பரவிற்று. அது குறித்த அவர் களது பேச்சை நேரிலும் கேட்டுளேம்

பழமைக்கிழமையுடைய சைவப் பெரு மக்களுக்குப் பண்டுறும் நிலையில் இன்றும்

ஒரு வாய்ப்பாகக் கிடைக்கும்படி நம் சமயா சாரியர் நால்வர் சரித்திரம் ஷை முதுகவி அவர்கள் எழுதி இதனை ஓதியுறும் அடக்கம் இதில் உள்ளபடி உற்ற கையடக்கம் எனப் படும் (மெய்யடக்கம் விளக்கும்) ஒரு புதிய நூலை உலகிற்கு உதவுகின்ரூர்கள். தத்புருட தேசிக சிவம் அவர்கள் அகத்தைப் புறத்தே கேட்டார்ப் பிணிக்குந் தகை அவாய்க் கேளாரும் வேட்ப மொழிய வல்லார் ஆதலின் இதனை எழுதியதிலும் அவ்வியல்பு விளங்கச் செய்துதவினூர்கள். இது கிடைத் தற்கரிய சைவ நூல் என்பது நம் சமயா சாரியர் சரித்திரம் வேண்டித் தேடிப் பெற இல்லாத மெய்யன்பர்க்குப் பொய்யாகாது

இதனை எழுதி உதவிய சான்ருேர் திரு வம்பலமுடையார் திருவருளால் எல்லா நலங்களும், நீளாயுளும், இன்பமும், திரு வருட் செல்வமும் வளரப்பெற்று இனிது வாழ்க. வாழ்க. வாழ்க.

---



சைவ சமயாசாரியர் நால்வர்

உ

சிவமயம்

பாலறாவாயர் துணை

# சமயாசாரியர்
# நால்வர் சரித்திரம்

திருச்சிற்றம்பலம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

திருச்சிற்றம்பலம்

பரங் கருணைத் தடங்கடலாகிய சிவ பெருமானே "பரமபதி" எனத் துணிந்து, முறைப்படி சிவதீட்சை பெற்று, விபூதி உருத்திராக்க தாரணம், சைவ சந்தியா வந்தனா், ஸ்ரீ பஞ்சாட்சர செபம், சிவாலய வழிபாடு, சிவபூசை முதலியவற்றை மெய் யன்புடன் செய்துவருகின்ற சைவர்கள் ஓதி யுணர்தற்குரிய அருள் நூல்கள் தேவார திரு

வாசகம் முதலியனவாம். அத் தெய்வத் திருமுறைகளை ஓதி உணர்வதற்கு முன்னர், அவற்றைத் திருவாய் மலர்ந்தருளி நாமுய்யுமாறு செய்து வைத்த ஞானசிரியர்களாகிய நால்வர் பெருமக்கள் முதலியோரது சரித்திர உண்மைகளைத் தெளிவாக நாம் அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

## திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம்

திருச்சிற்றம்பலம்

வேதநெறி தழைத்தோங்க
மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப்
புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித்
திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு
திருத்தொண்டு பரவுவாம்.

திருச்சிற்றம்பலம்

— சேக்கிழார் பெருமான்.

பாரதப் பெருநாட்டில் மாதவஞ் செய்த வர்களுக்கு வாழ்விடமாய் அமைவது தென் றமிழ் நாடு. இதில் சிதம்பரம், திருவாரூர், திருவையாறு முதலிய திருத்தலங்கள் பல வற்றைக் கொண்டும், வான் பொய்ப்பினும் தான் பொய்யா, மலைத் தலைய கடற் காவிரியைப் பெற்றும் வளந் திகழ விளங்கு வது சோழ மண்டலம்.

சைவத் துறையின் வழிவந்த வளவர் குடிமன்னரது ஆட்சிக்குட்பட்ட இப்பொன் னித் திருநாட்டில் பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சை வயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப் பெயர்களையுடைய திருப்பதியில், அந்தணர் குலத்தில் கவுணிய கோத்திரத்தில் வேதங் களிலே பெரும் புலமை படைத்த "சிவபாத விருதயர்" என்பவர் ஒருவர் இருந்தார். அவரது இல்லக் கிழத்தியார், கற்பு மேம்படு சிறப்பாற் கணவனார் கருத்தமைந்த "பகவதியார்" என்பவர்.

இவ்விருவரும் வைதிகநெறி வழுவாது இல்லறம் நடத்திவரும் நாளில், சமணம்,

பௌத்தம் ஆகிய புறச் சமயங்களின் பொய் யொழுக்கங்களில் பெரும்பாலான மக்கள் தலைப்பட்டு நிற்க: அதனால் வேத வழக்கும் பூதி சாதன விளக்கமும் குறையத் தொடங் கின. இதனைக் கண்ட சிவபாத விருதயர் மனம் வருந்தி, வேற்றுச் சமயங்களை யொழித்துச் சைவசமயத்தை விளங்க வைக் கத் தக்க நன்மைந்தன் ஒருவனைப் பெறு வதற்குரிய தவத்தைச் செய்து வந்தார்.

புகலிப் பெரும்பதியில் பெரிய நாச்சியா ருடன் எழுந்தருளியிருக்கும் திருத்தோணிப் பெருமானது திருவருளால், பகவதி யம்மை யார் கருவுற்றார். பத்துத் திங்களிலும் வேத விதிப்படி சடங்குகள் நடைபெற்றன. ஒரு சித்திரை மாதத்துத் திருவாதிரை நன்னா ளில் கதிரவன் முதலிய கோள்கள் அழகான உச்சங்களில் நிற்கவும், பரசமயத் தருக்கு ஒழியவும், வைதிக சைவம் தழைத்தோங்க வும், திருநீற்று நெறி சிறக்கவும், தமிழ் செய்த தவம் நிரம்பவும், சிவம் பெருக்கும் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைப் பகவதி யம்மையார் பெற்றெடுத்தார்.

குழந்தை நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. குழந்தைக்குச் செய்ய வேண்டிய வைதிகச் சடங்குகளை, அவ்வப் போதுகளிற் செய்து வந்தார்கள். குழந்தைக்கு மூன்று வயது நிரம்பியது. சித்திரைத் திருவாதிரை நாளாகிய அன்று, சிவபாத விருதயர் திருக்கோயி லிலுள்ளபிரம தீர்த்தத்தில் நீராடிவரப் புறப் பட்டார். அப்போது சிவபெருமான் திருவருள் கூட்ட ஆளுடைய பிள்ளையும் அழுது தொடர்ந்து அவருடன் சென்றது.

பிள்ளையைக் குளக்கரையில் உட்கார வைத்துவிட்டுச் சிவபாத விருதயர் குளத்தி லிறங்கி அகமருட மந்திரம் ஓதிக்கொண்டு, நீரில் மூழ்கியிருந்தார். அவ்வேளையில் அவரைக் காணாது முன்னையுணர்வு மூண் டெழத், தம்மேலைச் சார்பு உணர்ந்தோ: சாரும் பிள்ளைமையினாலோ செம்மேனி வெண்ணீற்றாரது, திருத்தோணிச் சிகரத் தைப் பார்த்துப்பிள்ளையார்''அம்மேயப்பா'' என்று அழைத்தருளி அழுதருளினார்.

உடனே தோணியப்பர் அம்மையா ருடன் இடபவாகனத்தில் வந்து பிள்ளையா

ருக்குக் காட்சி யளித்துப், பொற்கிண்ணத்தில் திருமுலைப் பாலைக் கறந்து அவருக்கு ஊட்டும்படி அம்மையாருக்குக் கட்டளையிட்டார். அகில உலகங்களையும் பெற்ற அன்னையாகிய பெருமாட்டி, சிவபெருமானது அருளாணையின்படி திருமுலைப்பாலைப் பொன் வள்ளத்திற் கறந்து அபரஞான - பரஞான அமுதத்தை அதிற் கூட்டிப் பிள்ளையாருக் களித்து அவரது அழுகையைத் தீர்த்தருளினார்.

பாலையுண்ட பிள்ளையார், சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானமாகிய உவமையிலாக் கலைஞானத்தையும் பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கியஞானமாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானத்தையும் உடனடியாக உணர்ந்து, சிவஞான சம்பந்தராக விளங்கினார் நீராடி முடித்துக் கரையேறிய சிவபாத விருதயர் பாலடிசில் வள்ளத்தை யேந்திக் கொண்டு பேருணர்வில் நின்ற பிள்ளையாரை நோக்கி "எச்சில் மயங்கும்படி உனக்கு இதை இட்டவர்களைக் காட்டு" என்று சொல்லிக் கைச் சிறிய தொருமாறு கொண்டு அவரை ஓச்சினார்.

உடனே சிறிய பெருந்தகையார் ஆனந் தக் கண்ணீர் பெய்து உச்சியில் எடுத்தரு ளிய ஒரு திருக்கை விரலிஞற் சுட்டிக்காட்டித் "தோடுடைய செவியன்" என்று தொடங் கும் திருப்பதிகத்தை ஓதி, "எம்மை இது செய்த பிரான் இவனன்றே" என மொழிந் தார். குறைவில்லாத பெருந் தவத்தைச் செய்து பிள்ளையாரைக் குழந்தையாகப் பெற்ற சிவபாத விருதயர் மட்டில்லாத மகிழ்ச்சியடைந்து, கைகுவித்துப் போற்றி ஞர்.

பிள்ளையார் தோணியப்பர் திருக்கோயி லிஞட் சென்று வணங்கிஞர். சிவபாத விருதயரும் பிள்ளையார் ஞானம்பெற்ற செய்தியை யறிந்த ஊராரும் பேரானந்த மடைந்து திருக் கோயிலிலிருந்து பிள்ளை யாரை ஊர்வலமாக அழைத்துச்சென்றனர். சிவபாத விருதயர் பிள்ளையாரைத் தோளின் மேற் சுமந்து செல்லத் தோணிபுரத்து மக்கள் புண்ணிய முதலாகிய பிள்ளையாரைப் பலவாருகப் போற்றித் துதித்துக்கொண்டு, உடன் சென்று அவரது திருமாளிகையில் எழுந்தருளுவித்தார்கள்.

மறுநாட் காலையில் பிள்ளையார் சீகாழிக்கு அருகிலுள்ள திருக்கோலக்காவைத் தந்தையார் தோளில் ஏற்றிச்செல்ல அடைந்து, திருக்கோயிலில்வழிபாடுசெய்து கைத்தாளமிட்டு "மடையில் வாளை" என்று தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடியருளினார். கைத்தாளமிடுவதால் பிள்ளையாரின் பச்சிளங்கைகள் நோவுமே என்று பரிந்து, கருணைக் கடலாகிய கோலக்காப் பெருமான் ஸ்ரீ பஞ்சாட்சரம் பொறித்த செம்பொற்றாளமொன்றை அவருக்கு வழங்கியருளினார்.

பிள்ளையார் ஞானப்பாலுண்டு பொற்றாளம் பெற்ற செய்தியைக் கேள்வியுற்ற சோழ நாட்டு மக்கள் திரளாக வந்து தெரிசித்துத் தத்தம் ஊர்களுக்கு வந்தருளும்படி அவரிடம் வேண்டினார்கள். அவர்கள் வேண்டுகோளை யேற்றுப் பிள்ளையார் முதன் முதலாக வழிபாட்டுக்கு எழுந்தருளித் திருப்பதிகம் ஓதியருளிய திருத்தலம், அவரது நற்றாயாகிய பகவதியம்மையார் பிறந்த திருநனிபள்ளியாகும்.

சிதம்பரத்துக் கருகிலுள்ள திருவெருக்கத்தம்புலியூரில் யாழிசை வல்ல திருத்

தொண்டர் திருநீலகண்டப் பெரும்பாண ரும், அவரது மனைவியார் மதங்க சூளாமணி யாரும் சீகாழிக்கு வந்து, பிள்ளையாரைத் தெரிசித்தனர். பிள்ளையார் அவர்களின் வருகைக்கு மகிழ்ந்து தலங்கள் தோறும் தாம் பாடும் திருப்பதிகங்களை யாழில் அமைத்து வாசித்து வரும்படி அவர் களுக்குக் கட்டளை யிட்டார்.

பிள்ளையார் உண்ணப் பெருமான் கொடுத்த சிவஞான வடிவமாக விளங்கும் தில்லையம்பலத்தில் அவனது அருட் கூத்தைத் தெரிசிக்க விரும்பிப் பாலருவாயர் வழியிலுள்ள தலங்களை வணங்கிக்கொண்டு சிதம்பரம் சென்றார். பின்னர் திருவெருக்கத் தம்புலியூர், திருமுதுகுன்றம் ஆகிய திருத் தலங்களை வணங்கித் திருநெல்வாயிலரத் துறையைத் தெரிசிக்க விரும்பித் தந்தை யார் தோளினின்றும் இறங்கி நடந்து சென்றார். வழிநடைக் களைப்பால் அயர்வுற்று "மாறன்பாடி" என்னுமிடத்தில் சிறிது நேரம் தங்கியிருக்க அவ்விரவில் சிவ பெருமான் நெல் வாயிலரத்துறை வாசி களின் கனவில் தோன்றித் திருக்கோயிலில்

முத்துச் சிவிகை, குடை, சின்னங்கள், வைத்திருப்பதாகவும் அவற்றைப் பிள்ளையாரிடம் சேர்ப்பிக்கும்படியும் ஆணையிட்டருளினார். பிள்ளையாருக்கும் இச் செய்தியை இறைவன் உள்ளவாறு உணர வைத்தார்.

வைகறைப் பொழுதில் பிள்ளையாரும், அடியார்களும், ஊராரும் துயிலுணர்ந்தெழுந்தனர். ஊராரின் வேண்டுகோளையேற்றுப் பிள்ளையார் திருவருட் பிரசாதமாகிய முத்துச் சிவிகையை வலம் வந்து நிலமுற வணங்கி அதில் விளங்கிய திருவெண்ணீற்றொளியைப் போற்றி ஆதியார் அருளை நினைந்து அஞ்செழுத்தோதி உலகமுய்ய அதன்மேல் ஏறியமர்ந்தார். அரத்துறையடிகளை வழிபாடு செய்து கொண்டு சீகாழியை அடைந்தார் பிள்ளையார்.

அவரது உபநயனப் பருவத்தில் வேத விதிப்படி அவருக்கு உபநயனச் சடங்கு நடைபெற்றது. வேதாந்த முடிவுகளை ஓதாதுணர்ந்தபிள்ளையார் உபநயனச்சடங்குக்கு வந்திருந்த வேத விற்பன்னர்களுக்குள்ள ஐயந்திரிபுகளை நீக்கி ஐந்தெழுத்தின் பெருமையை விளக்கித் "துஞ்சலுந் துஞ்சல்

இலாத போழ்தினும்" என்ற தலைப்பை யுடைய பஞ்சாக்கரத் திருப்பதிகத்தை ஓதி யருளினார்.

பிள்ளையாரது சிவஞானப் பேற்றைப் பற்றிக் கேள்வியுற்ற திருநாவுக்கரசு சுவாமி கள் அவரைக் கண்டு மகிழச் சீகாழிக்கு வந்தார். பிள்ளையார் அவரை எதிர்கொண் டழைத்து வரவேற்றார். இருவருமாகத் திருக்கோயிலுக்குச் சென்று வணங்கிச் சில நாள் இன்புற்றிருந்தனர். பிறகு திருநாவுக் கரசு சுவாமிகள் தலயாத்திரை குறித்துப் புறப்பட்டுச் சென்றார்

ஆளுடைய பிள்ளையார் அடியார்கள் புடைசூழப் பல தலங்களைத் தெரிசித்துக் கொண்டு திருப்பாச்சிலாச்சிராமத்தை அடைந்தார். அங்கு கொல்லி மழவன் என்ற அரசன் பிள்ளையாரை எதிர்கொண்டு வர வேற்றுத் திருக்கோயில் வழிபாட்டுக்கு அழைத்துச் சென்றான். முயலகன் என்னும் நோயினாற் பிணிப்புற்று வருந்திய கொல்லி மழவனின் புதல்வியை நோய்நீக்கம் வேண் டித் திருக்கோயிற் சந்நிதானத்திற்கு இட்டு வந்து அவன் விட்டு வைத்திருந்தான்.

அங்கே உணர்விழந்து நிலஞ் சோர்ந்து கிடந்த அவளைப் பிள்ளையார் பார்த்து இவளுக்கு என் உற்றது என வினவ, மழவன் "அடியேன் பெற்ற இவளை முயலகன் நோய் பொருந்தியது" எனக் கூறினன். உடனே பிள்ளையார் பரம்பொருளைப் பணிந்து "துணிவளர் திங்கள்" என்னும் தலைப்பையுடைய திருப்பதிகம் பாட அவள் நோய் நீங்கி எழுந்து நலம் பெற்றாள்.

பின்பு பிள்ளையார் திருக்கொடி மாடச் செங்குன்றூரை அடைந்தார். அப்பகுதியில் ஆண்டுதோறும் முன் பனிக் காலத்தில் ஒரு வகை நச்சுக் காய்ச்சல் மக்களுக்கு வருவது வழக்கம். அப்போது அக்காய்ச்சல் பிள்ளையாருடன் வந்த அடியார்களையும் பற்றியது. பிள்ளையார், "அவ்வினைக் கிவ்வினை" என்ற தலைப்பையுடைய திருநீலகண்டத் திருப்பதிகத்தைப் பாடியருளி அவ்வூரில் எந்த நாளிலும் அந்த நச்சுக்காய்ச்சல் வரவொட்டாது அருள் புரிந்து, அடியார்கள்பால் ஊழ்வினைத் துன்பம் அணுகாதிருக்கவும் கருணை பாலித்தார்.

வேனற்பருவம் வந்தது. வெயில் வெப்பம் மிகுதியாயிற்று. பிள்ளையார் சிவிகையிலிவர்ந்து திருப்பட்டீச்சரத்தை அடையும் போது வெயில் வெப்பம் அவரைத் தாக்காதிருக்க அவரது திருமுடியின்மீது ஒரு சிவபூதம் முத்துப் பந்தர் ஒன்றைத் தாங்கி வந்து பட்டீசர் எம்மை விடுத்தார் என்று சொல்லப் பரிசனங்கள் அதனையேற்றுத் தாங்கிக் கொண்டார்கள்.

பிள்ளையார் வழியிலுள்ள தலங்களை வணங்கிக்கொண்டு திருவாவடுதுறைவந்து சேர்ந்தார். அப்போது சிவபாதவிருதயர் அங்குவந்து வேள்வி செய்வதற்குரிய காலம் வந்து விட்டபடியால் அதற்குப் பொருள் வேண்டுமென்று பிள்ளையாரிடம் வேண்டினூர். பிள்ளையார் "அந்தமில் பொருளாவன ஆவடுதுறையுள் எந்தையார் அடித்தலங்கள ன்றோ" என்று எழுந்து திருக்கோயிலுக்குச் சென்று, "நீள் நிதி வேண்டினூர்க்கீவது ஒன்றுமற்றிலேன், உன்னடி அல்ல தொன்றறியேன்" என்று அருள்வினவிய "இடரினும் தளரினும்" என்ற தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினூர். சிவபெருமான்

திருவருளால் ஒரு பூதம் அங்கே தோன்றி ஆயிரம் பசும் பொற் கிழியொன்றை அகன் பீடத்தில் வைத்து இவ்வுலவாக்கிழி இறைவன் உமக்கருளியது என்று உரைக்கப் பிள்ளையார் அக்கிழியைத் தந்தையாரிடம் அளித்துச் சிவபெருமானை முன்னாக வைத்துச் செய்யும் வேத வேள்விக்குப் பயன்படுத்திக் கொள்ளுமாறு கூறினார்.

பிறகு பிள்ளையார் பல தலங்களையும் வணங்கிக் கொண்டு திருநீலகண்ட யாழ்ப் பாணரது தாயார் பிறந்த இடமாகிய தருமபுரம் வந்து சேர்ந்தார். அங்கே பாணரது சுற்றத்தார் பாணரை நோக்கிப் "பிள்ளையாரது திருப்பதிகத்தின் ஓசை, அளவுபெற நீர் யாழிலமைத்து வாசிப்பதால் அகிலமெல்லாம் இசை வளர்வதாயிற்று" என்று பாராட்டப் பாணர் அது கேட்டு, நடுநடுங்கிப் பிள்ளையாரைத் தொழுது எல்லையில்லாத திருப்பதிக இசை அடியேனது யாழில் அளவு படா வகையை இவர்களும் ஏனையோரும் அறியும்படி செய்தருள வேண்டுமென்று விண்ணப்பிக்கப் பிள்ளையார், "மாதர் மடப்பிடியும்" என்னும் தலைப் பையுடைய யாழ் மூரிப் பதிகத்தை அருளிச்

செய்தார். பாணனர் அத்திருப்பதிகத்தை யாழிலிட அதன் இசை அதனுள் அடங்காத தாயிற்று. உடனே பாணனர் யாழை உடைக்க ஓங்கினர். பிள்ளையார் அவரைத் தடுத்து யாழை வாங்கிக் கொண்டு அவரை நோக்கி "ஐயரே! திருவருளின் பெருமை இக் கருவியினில் அளவு படுமோ? திருப் பதிக இசையை இதன் அளவுக்கு அமைத்து வாசித்தலே தகும் என்று சொல்லி யாழைக் கொடுக்கப் பாணனர் பிள்ளையாரைத் தொழுது யாழை வாங்கித் தலையின் மேல் வைத்துக் கொண்டார்.

பிறகு பிள்ளையார் திருச்சாத்தமங்கை யில் திருநீலநக்கராலும் திருச்செங்காட்டங் குடியில் சிறுத்தொண்டராலும் வரவேற்று பசரிக்கப்பெற்று அத்தலங்களை வழிபட்டுத் திருமருகலை அடைந்தார். அத் திருத்தலத் தில் தங்கி வழிபாடாற்றிக் கொண்டிருக்கும் நாளில் ஓர் நாள் ஒரு வணிகன் ஒரு கன்னிப் பெண்ணை அழைத்துக்கொண்டுவந்து திருக் கோயிற்புறத்திலுள்ள ஒருமடத்தில் இராத் துயில் கொண்டிருந்தபோது அவனை ஓர் நச்சரவுதீண்ட, விடம் தலைக்கேறி அவனது

ஆவி நீங்கும் தன்மையைக் கண்டு உடன் வந்த கன்னி செய்வ தொன்றும் அறியாத வளாய் நிலை தளர்ந்து சோர்ந்து திருக் கோயில் வாயிலை நோக்கித் தொழுதழுது புலம்பினாள். அழுகையொலி கேட்ட ஆளு டைய பிள்ளையார் அவ்விடத்தை யடைந்து அம்மங்கைக்கு அபயங் கூறி விளைந்த செய்திகளை வினவினார்.

அம்மங்கை "வைப்பூரிலுள்ள தாமன் என்பவனின் புதல்வியர் எழுவருள் தான் இளையவளென்றும், அரவு தீண்டப்பெற்ற இவன் தனது அத்தை மகனென்றும், தன் மூத்த சகோதரியர் ஒவ்வொருவரையும் இவ னுக்கென்றே சொல்லிச் சொல்லி நிறையப் பொருள் கொடுக்க முன் வந்தவர்களுக்குத் தன் தந்தை மணம்புரிந்து கொடுத்துவிட் டானென்றும், அதனால் தளர்வடைந்த இவ னுக்காகத் தந்தையை மறைத்து இவனை மணந்து இவனுடன் வாழவெண்ணி வந்த தாகவும், வழியில் வாளரவு தீண்ட இவன் மாண்டானென்றும், வருத்தத்துடன் கூறி னாள். பிள்ளையார் "சடையாய் எனுமால்" என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தை

பாடித் திருமருகற் பெருமானை வேண்டி அவ்வணிகனை உயிர் பெற்றெழச் செய்து அவ்விருவரும் மணம் புணரும் பெருவாழ்வு கொள்ள வழி வகுத்துக் கொடுத்தார்.

திருநாவுக்கரசு சுவாமிகளைத் திருப்புகலூரிற்கண்டு திருவாரூர்த் திருவாதிரை விழாச் சிறப்பை அவர் சொல்லக் கேட்டுத் திருவாரூரை அடைந்து தொழுது மீண்டும் திருப்புகலூரை அடைந்தார் பிள்ளையார். அங்கிருந்து திருநாவுக்கரசு சுவாமிகளுடன் திருவீழிமிழலையை அடைந்த பிள்ளையாருக்கு வீழி இறைவர், அங்கே காழிக் காட்சியை அருளினார். பிள்ளையாரும் நாவரசரும் திருவீழிமிழலையில் எழுந்தருளியிருந்த பொழுது வானம் பொய்க்கப் பஞ்சம் உண்டாயிற்று. வீழியிறைவர் ஞானசிரியரிருவருக்கும் கனவில் தோன்றி, "உலகியல் நிகழ்ச்சியால் வந்த பசிநோய் உம்மை அடையாதாயினும் உம்மிடத்து நிலவுகின்ற சிவனடியார்களின் வாட்டந் தீர்ப்பதற்காகப் பஞ்சம் தீரும் வரை நாடோறும் திருக்கோயிற் கிழக்கு மேற்குப் படிகளில் ஒவ்வொரு பொற்காசு

வீதம் வைத்து வருவோம்'' என்று அருளிச் செய்தார்.

அக்காசுகளைப் பெற்றுப் பிள்ளையாரும் நாவரசரும் தங்கள் தங்கள் திருமடங்களில் அடியார்களுக்குத் திருவமுதளித்து வந்தனர். பிள்ளையார் பெற்ற காசு, வாசி(வட்டம்)யின்றி மாறுதலையறிந்து அவர் "வாசி தீரவே'' என்னுந் தலைப்புடைய பதிகம் பாடி வாசியில்லாத காசு பெற்றார். மழை பொழிந்து பஞ்சம் தீர்ந்தது.

பிள்ளையாரும் நாவரசரும் திருமறைக்காடு தொழ விரும்பி வழியிலுள்ள தலங்களை வணங்கிக்கொண்டு வேதவனத்துப் பெரு மக்களால் வரவேற்கப் பெற்றுத் திருக்கோயிலை அடைந்தார்கள். முன்னாளில் வேதங்கள் அருச்சித்துத் திருக்காப்புச் செய்துவைத்த அபிமுகத் திருவாயிற் கதவுகள் அதுகாறும் திறக்கப்பெறுமலிருந்தன. பிள்ளையார் அப்பரை நோக்கி அத்திருக்காப்பு நீங்குமாறு தமிழ் பாடியருளும்படி வேண்ட வாகீசர் அதனை யேற்றுத் திருப்பதிகம் பாடித் திருக்காப்பு நீக்கியருளினார். வாக்கின் மன்னரும், புகலி மன்னரும் நேர்

வாயிலில் இறைவனைத் தெரிசித்து இன்புற்றனர். பின்பு நாவரசர் பிள்ளையாரிடம் திறந்த கதவுகள் திருக்காப்படையப் பாடும்படி வேண்டப் பிள்ளையார், "சதுரம் மறை" என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடிக் காப்பு நிரம்ப வைத்தருளினார். அங்கிருக்கும் நாளில் இருவரும் திருவாய்மூர் தொழுது திரும்பினர்.

இப்படி இவர்களிருவரும் இங்கே எழுந்தருளி யிருக்கப், பாண்டி நாட்டில் பொய்த்நெறியாகிய சமணெறி புகுந்து மிகுந்து மக்களைக் கைப்பற்றியது. அப்போது கன்னி நாட்டையாண்ட கூன் பாண்டியனென்னும் மன்னனும் முன்னைத் தீவினைப் பயத்தால் சமணெறிச் சார்வையே அறமென நினைத்து ஒழுக, அதனால் வைதிக சைவ வழக்க நன்னெறி திரிந்து நாட்டில் தவைநெறி நடந்தது. நாடு முழுவதும் சமணர்களது பாழிகளும் பள்ளிகளுமாக ஆயின. எங்கும் இருட் கூட்டங்கள் போலச் சமணர்கள் மயிற்பீலியும் குண்டிகையும்பற்றிக்கொண்டு மொய்க்கத் தொடங்கினர்கள்.

தீவினையோடு தென்னவன் செய்த நல்வினையும் உடனிருந்ததால் அதன் பயனாக அவனை உய்யவைப்பதற்குச் சோழமன்னன் பெற்றெடுத்த செல்வியாகிய பாண்டிமாதேவியின் பக்கத்திலும் மதியமைச்சராகிய குலச்சிறையார் பக்கத்திலுமன்றிச் சைவம் வேறெங்கும் காணமுடியாததாயிற்று. தமிழ் நாட்டுக்கு வந்து சேர்ந்த இந்தப் பெருந் தீங்குக்கு வருந்திய இவ்விருவரும், உலகுய்ய வந்து சைவச் செந்நெறியை விளக்குகின்ற புகலி வேந்தர் திருமறைக் காட்டில் எழுந்தருளி யிருப்பதைக் கேள்வியுற்று அவரது திருவடிகளைப் பணிந்து வரும்படி பரிசனங்களை அனுப்பினார்கள்.

அறிவின் மிக்கவர்களாகிய அவர்கள் திருமறைக் காட்டுக்குச் சென்று திருஞான சம்பந்தப் பிள்ளையாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிக் கன்னிநாடு அமணர் களாற் கட்டழிந்திருக்கும் செய்தியை மாதேவியாரும் குலச்சிறையாரும் இங்கே விண்ணப்பிக்கும்படி எங்களை வரவிட்டார்கள் என்று தெவித்துக்கொண்டார்கள். உடனே பிள்ளையார் கன்னி நாட்டிற்குச்

சென்று, அமண் குண்டர்களை வென்று வேந்தனை வெண்ணீறு அணிவித்து நாட்டைச் சிவநெறியில் நிறுத்த உறுதி கொண்டு திருக்கோயிலுக்குச் சென்று இறைவனைத் தொழுது விடைபெற்று வந்து திருநாவுக்கரசரிடம் இதனை அறிவித்தார். நாவரசர் பிள்ளையாரிடம் அமண்கையர்களது வஞ்சனைகளைப்பற்றி எடுத்துக்கூறி அப்போது புறப்படுவதற்கு நாளுங் கோளும் நன்ருயில்லை என்பதையும் தெரிவித்தார். சிவபெருமானது திருவடிகளைப் பேணும் மெய்யடியார்களுக்கு நாளும் கோளும் நலிவு விளைக்க மாட்டா என்று கூறி, "வேயுறு தோளி பங்கன்" என்னுந் தலைப்பையுடைய கோளறு திருப்பதிகத்தைப் பாடி அப்பரடிகளிடம் விடை பெற்றுக் கொண்டு வழியிலுள்ள தலங்கள் பலவற்றையும் வழிபட்டுப் பிள்ளையார் பாண்டி நாட்டை வந்தடைந்தார்.

மதுரையம்பதியை நோக்கிப் பிள்ளையார் வரும் வேளையில் அமணர்களுக்குத் துன்னிமித்தங்கள் பல நிகழ்ந்தன. மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் நன்னி

மித்தங்கள் பலவற்றைக் கண்டு மகிழ்ந்தார்கள். பிள்ளையார் மதுரைமாநகரத்தின் புறவெல்லையில் எழுந்தருளி வருவதை யறிந்த மங்கையர்க்கரசியார் அவரை எதிர் கொண்டு வரவேற்று அழைத்து வரும்படி குலச்சிறையாரை அனுப்பினர். அரசியார் ஆணைப்படி அமைச்சனர் சென்று சிவிகை யில் அமர்ந்து எழுந்தருளி வரும் பிள்ளையா ரது திருவடிகளில் விழுந்து வணங்கி எதிர் கொண்டார் பிள்ளையார் அவருக்கு அருள் மொழிகள் கூறித் திருவாலவாய் எம்மருங் கினது என வினவ அமைச்சனர் விசும்பை அளக்கும் வியன் கோபுரங்களுடன் விளங் கும் இதுவே திருவாலவாய் என்று காட்ட ''மங்கையர்க்கரசி'' என்னும் தலைப்பை யுடைய திருப்பதிகத்தைப் பிள்ளையார் அப் போது பாடி அரசியார், அமைச்சனராகிய இருவரது பணிகளையும் அப்பதிகத்திற் சிறப்பித் தருளினர்.

குலச்சிறையாருடனும் திருத்தொண்டர் களுடனும் பிள்ளையரர் திருவாலவாய்த் திருக்கோயிலை யடைந்து வணங்கி, 'நீலமா மிடற்று' என்னுந் தலைப்பையுடைய திருப்

பதிகத்தைப் பாடியருளினூர். அப்போது ஆலவாயண்ணலையும் ஆளுடைய பிள்ளையாரையும் கண்டு வணங்கும் விருப்பத்துடன் அங்கு வந்த மங்கையர்க்கரசியார் பிள்ளையாரது திருவடிகளில் விழுந்து வணங்கி அவரது வருகைக்கு நாடு செய்த நற்றவம் மிகப் பெரியது என்று கூறி இன்புற்ருர். பிள்ளையார் அவருக்கும் அமைச்சனூர்க்கும் பரிசனங்களுக்கும் அருள் முகங்கொடுத்துப் புறத்தே வந்து, அமைச்சனூர் காட்டிய திருமடத்தில் அடியார்களுடன் எழுந்தருளியிருந்தார். அன்றிரவு சிவனடியார்கள் எடுத்த திருப்பதிக இசை சமண அடிகள்மாரது செவிப்புலம் புக. அவர்கள் அதனைப் பொருதவர்களாய் அரசனிடம் சென்று, "மதுரையிற் சைவ வேதியர் மேவினர். அவர்களைக் கண்டு முட்டு ஆயினேம் என்று கூறினர். அரசன் "கேட்டு முட்டு ஆயினேன்" என்று கூறி இதற்குச் செய்ய வேண்டுவது யாது என அவர்களை வினவினன். அவர்கள் நம்மை வெல்லக் கருதி இங்கே வந்திருக்கும் சைவர்கள் தங்கியிருக்கும் மடத்தில் மந்திரத்தால் தீயிடுதலே சாலும் என்று சொன்னூர்கள். அரசன் அங்ஙனமே விரைந்து

செய்யுமாறு அவர்களுக்குச் சொல்லிவிட்டுக் கவலையோடு பள்ளியறைக்குச் சென்றான்.

மங்கையர்க்கரசியார், பள்ளியறைக்குச் சென்றுமன்னவன்உரையாடாதிருப்பதைக் கண்டு உற்றதை உரைக்குமாறு வேண்டினார் அடிகள்மாரை வாதில்வெல்லப் பிள்ளையார் வந்திருக்கும் செய்தி யறிந்து கேட்டு முட்டாயினமையை மன்னன் சொல்ல. அரசியார் "வாதில் வென்றவர் பக்கம் சேர்வோம். இதற்கு வருந்தல் வேண்டாம்" என்று தேற்றினார்.

அரசனிடம் விடைபெற்றுச் சென்ற அடிகண்மாரனைவரும் தவம றைந்தல்ல செய்து தங்கள் மந்திரத்தால் சிவநெறி வளர்க்கவந்தார் திருமடத்தில் செந்தீயைச் சேர்க்க முயன்றனர். பூதி சாதனர் மடத்தில் சமணர்கள் புனைந்த சாதனைகள் பயனில வாயின. அது கண்டு தளர்ந்த அவர்கள், கைத்தழல் கொண்டு திருமடப்புறத்திலே வந்து தீச்செயல் புரியத் தலைப்பட்டார்கள். இதனைக் கண்ட பரிசனங்கள் பிள்ளையாரிடம்சென்று விண்ணப்பிக்கஅவர் "வெய்ய தீங்கு இது. வேந்தன் மேற்று"

என்பதைத் திருவுளங்கொண்டு, "செய்யனே திருவாலவாய்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடிப் பொய்யராம் அமணர் கொளுவும் சுடர், பையவே சென்று பாண்டியற்காக எனப் பணித்தார்.

திருமடத்தில் வைக்கப்பெற்ற தீ வெப்பு நோயாக மாறிப் பாண்டிய மன்னனைச் சென்று பற்றியது. அரசனுக்கு வெப்பு நோய் வந்ததை அருகிருந்தார் சொல்லக் கேட்டு அரசியாரும் அமைச்சனும் அச்சங் கொண்டு மன்னனிடம் வந்தார்கள். அரசனுக்கு வந்த வெப்பம் அருகு நின்றுரையும் சுடும் அளவிற் பெருகியது. மருத்துவ வல்லுநர்கள் பெரிதும் முயன்றும் பயன் கிடைக்கவில்லை. சமண அடிகள்மார் தெளித்த குண்டிகை நீர் நெருப்பிலிட்ட நெய் போலவும் அவர்கள் தடவிய மயிற்பீலிகள் அத்தீயிலிட்ட விறகுகள் போலவும் மன்னனுக்குப் பெரும் துன்பத்தை விளைவித்தன.

மன்னவனது இன்னலைக் கண்ட அரசியாரும் அமைச்சனும் அவனிடம் "புகலி வேந்தருக்குச் சமணர்கள் செய்த தீங்கே இங்ஙனம் வெப்பு நோயாக விளைந்தது

போலும், அவர் இங்கு எழுந்தருளிவந்தால் இப்பிணியேயன்றிப் பிறவிப்பிணியும் தீரும்' என்று சொல்ல அங்ஙனமாயின் அவரை அழையுங்கள் என்று அரசன் சொன்னான். உடனே அரசியாரும் அமைச்சனாரும் பிள்ளையார் எழுந்தருளியிருந்த திருமடத்திற்குச் சென்று, "அரசனது வெப்பு நோயை ஒழித்து அவனையும் தங்களையும் காத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

பிள்ளையார் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனைத் தொழுது "வேத வேள்வி" என்னுந் தலைப்புடைய திருப்பதிகத்தைப் பாடிச் சமணர்களை வாதில் வெல்லத் திருவுள்ளம் கேட்டு விடைபெற்றுக் கொண்டு அரண்மனைக்கு எழுந்தருளினார். மன்னன் பொற் பீடமொன்றை அவனது முடியின் பக்கத்தில் இடும்படி கட்டளையிடப் பிள்ளையார் அதில் அமர்ந்தருளினார். பொறுமையே வடிவமான சமணர்கள் பிள்ளையாருடன் சமய வாதம் செய்யத் தலைப்பட்டுத் தலை திமிர்ப்பக் குரைத்தார்கள். மங்கையர்க்கரசியார் குழவிப் பருவத்தினராகிய பிள்ளையாரை ஒருபாலும் குண்டர்களாகிய சமணர்

களை மற்றொருபாலும் கண்டு மருண்டுநிற்கப் பிள்ளையார் "மானினேர்விழி மாதராய்" என்னுந் திருப்பதிகத்தை ஓதி ஆலவாயரனிற்பதால் தாம் எளியரல்லர் என்பதை அவருக்கு அறிவுறுத்தினார்.

பாண்டியன் பிள்ளையாரையும் சமணர்களையும் நோக்கி வேறுவாது செய்யவேண்டுவதில்லை. எனக்குற்ற வெப்பு நோயை ஒழித்து நீங்கள் தேறிய தெய்வத் தன்மையை நிலை நாட்டுவீர்களாக" என்றான் சமணர்கள் அரசனது இடதுபக்கத்து நோயை நீக்குவதாகக்கூறி முயன்றுதோல்வியடைந்தார்கள். பிள்ளையார் ஆலவாயரனையும் திருநீற்றையும் போற்றி "மந்திரமாவது நீறு" என்னுந் தலைப்பையுடைய திருநீற்றுப் பதிகத்தைப்பாடித் தமதுதிருக்கரத்தால் மன்னவனது வலது பக்கத்தில் திருநீறு பூசினார் உடனே அவ்வலப்பக்கத்தின் வெப்பம் நீங்கிப் பொய்கை போல் குளிர்ந்தது. நீங்கிய வலப்பக்கத்து வெப்பம் புறஞ்செல்லாது இடப்பக்கத்து வெப்பத்துடன் ஒன்று கூட அவ்விடப் பக்கம் பெருந்தீயென அரசனைச் சுட்டுவருத்தியது. அரசன் சமணர்களை நோக்கி

நீங்கள் தோற்றுவிட்டீர்கள். என் முன்னே நில்லாது அகலச் செல்லுங்கள்" என்று சினந்து கூறிப் பிள்ளையாரை வணங்கி "இடப்பக்கத்து வெப்பமும் நீங்க அருள் செய்ய வேண்டுமென வேண்டினன். பிள்ளையார் திருநீறு பூசி இடப்பக்கத்து வெப்பத்தையும் போக்கியருளினர். பாண்டியனும், மாதேவியாரும், மதியமைச்சரும் "ஞானசம்பந்தர் பாதம் நண்ணி நாம் உய்ந்தோம்" என்று மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர்கள்.

பின்பு, சமணர்கள், அவரவர் சமய உண்மைகளை ஏட்டிலெழுதித் தீயிலிட வேண்டுமென்றும் அதில் எரிந்த ஏடு தோற்றதாகவும் வேவாத ஏடு வென்றதாகவும் கொள்ள வேண்டுமென்று சொல்ல அரசன் முன்னிலையில் பிள்ளையாரும் அதற்கு இசைந்தார். தீ வளர்க்கப் பெற்றது. பிள்ளையார் தமது திருப்பதிகங்கள் எழுதப்பெற்ற ஏட்டுச்சுவடியைக் கொணர்வித்து அதைத் தொழுது காப்பவிழ்த்துப் பிரித்துப் பார்க்கப் "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் தலைப்பையுடைய திருநள்ளாற்றுத் திருப்பதிகம் உதயமாயிற்று. அந்தத் திருப்பதிகத்தை ஒரு

ஏட்டிலெழுதித் "தளிரிள வளரொளி" என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தில் "எரியிடில் இவை பழுதிலை மெய்மையே" என்னும் சொற்றொடரை வைத்துப் பாடி எல்லோரும் காணத் தீயிலிட்டார். அது வேவாது பச்சையாய் விளங்கிற்று. சமணர்களும் தங்கள் பொருள் தீட்டியஏடொன்றை இது உய்யுமோ என்னுங் கவலையுடன் தீயிலேயிட; அது அனலிடைப்பட்ட பஞ்சுபோல வெந்து சாம்பலாயிற்று.

சமணர்கள் அரசனிடம் இதுவரை இரண்டு முறைகளில் வாது செய்தோம். இனி மூன்ருவது முறையாகவும் வாதிட்டு அதில் வெற்றி காண்போமாயின், அதனுல் எங்கள் சமய உண்மை நிலைநின்றதெனக் கொள்ளலாமென்று கூறினர். பிள்ளையார் இனி என்ன வாது செய்ய வேண்டுமெனக் கேட்கச் சமணர்கள் முன் போல் அவரவர் சமய உண்மைகளை எழுதி ஆற்று நீரிலிட வேண்டுமென்றும் நீரோட்டத்திற்செல்லும் ஏடு தோற்றதாகவும் அங்ஙனம் செல்லாது தங்கிநிற்கும் ஏடு வென்றதாகவும் கொள்ள வேண்டுமென்றும் சொல்லக் குலச்சிறை

யார் இம்முறையும் தோற்றுரை என்ன செய்வதென்று கேட்டார். உடனே சமணர்கள் ஆத்திரமும் கோபமும் கொண்டு "தனி வாதில் அழிந்தோமாகில் வெங்கழுவேற்றுவான் இவ்வேந்தன்" என்று சொன்ஞர்கள்.

அரசனும் அமைச்சரும் நகர மக்களும் வைகையாற்றங் கரையில் கூடியிருந்தனர். சமணர்கள் "அத்தி நாத்தி" என்ற அவர்கள் பொருள் எழுதிய ஏட்டை ஆற்றிலிட்டார்கள். அது ஆற்ருேட்டத்தோடு விரைந்து சென்று மறைந்தது. பிள்ளையார் "வாழ்க அந்தணர்" என்னும் தலைப்பை யுடைய திருப்பாசுரப் பதிகத்தை ஏட்டில் எழுதி ஆற்றிலிட, அது மருவிய பிறவி யாற்றில் மாதவர் மனம் சென்ருற்போல் எதிர்த்து நீரைக் கிழித்துக் கொண்டு சென்றது. அதனை யெடுப்பதற்குக் குலச்சிறையார் ஒருகுதிரைமீதேறி விரைந்தார். பிள்ளையார் "வன்னியும் மத்தமும்" என்ற தலைப்பையுடைய பதிகத்தைப் பாடி ஏட்டை நிறுத்தக் குலச்சிறையார் அதனை எடுத்து வந்தார். அவ்வேடு எதிரேறிச் சென்று

தங்கிய இடமே "திருவேடகம்" என வழங்கப்பெறுகிறது.

தெய்வ வழிபாட்டை விடச் சிறந்ததாகச் சீவகாருணியத்தைக் கடைப்பிடிப்பார் போல நடித்துப் பிள்ளையார் பதினாறுயிரம் திருத்தொண்டர்களுடன் தங்கியிருந்த திருமடத்தில் அவர்களனைவரும் துயில்கொண்டிருந்த நடுஇரவில் தீயைவைத்துப் பெருங் கொலைகாரர்களாக முயன்ற சமணர்கள் எண்ணாயிரவரையும் அவர்கள் ஒப்புக் கொண்டபடி கழுவிலேற்றி முறை செய்யும் படி அரசன் அமைச்சருக்குக் கட்டளையிட்டான். இதனைக் கேட்ட ஞானசம்பந்தப் பிள்ளையார் சமணர்கள் பால் எள்ளளவும் பகைமை இல்லாதவராயினும் "குற்றத்தின் அளவுக்கு மிகுதிப்படாது கொடுக்கும் அரச தண்டனையில் தாம் குறுக்கிடுவது தகாது" என்று எண்ணி அதனை விலக்காதிருந்தார். திருமடத்தில் தீ வைத்த எண்ணாயிரம் சமணர்களும் கழுவிலேறினார்கள்.

பரசமய கோளரியாகிய பாலருவாயர் பாண்டிய மன்னனுக்குத் திருநீறு வழங்

கிஞர். மன்னன் நீறணிந்தானென்று மதுரை வாழ் மக்களனைவரும் நீறணிந்தனர். பாண்டி நாட்டில் ஊனமாம் சமணம் நீங்கி ஞானசம்பந்தர் வாய்மை பெருகியது. திருப் பாசுரத்தில் "வேந்தனும் ஓங்குக" என்று அமைந்த அருள்வாக்கு கூன்பாண்டி யனது கூனை நீக்கி அவனை நின்றசீர் நெடு மாறனாக ஆக்கியது பிள்ளையார் அரசனும் அரசியும் அமைச்சரும் உடன்வர ஆலவா யண்ணல் கோயிலை அடைந்து ஞாலம் நின் புகழேயாக வேண்டுமென வேண்டி "வீட லால வாயிலாய்" என்னும் தலைப்பை யுடைய திருப்பதிகத்தைப் பாடியருளித் திருமடத்தை அடைந்தார்.

மானமிலா அமணருடன் வாது செய்து வென்று மீனவன் நாடுய்ய வெண்ணீறு பெருக்கிய வைதிக சூளாமணியைக் காண விரும்பி அவரது தந்தையாராகிய சிவபாத விருதயர். மதுரையம்பதியை அடைந்து ஆலவாயண்ணல் திருக்கோயிலுக்குச் சென்று வணங்கித் திருமடத்தை நண்ணி ஞர். தந்தையாரது வருகையைக் கேள்வி யுற்றுப் பிள்ளையார் அவரை வரவேற்று

“அறியாப் பருவத்தே என்னை எடுத்தாண்ட பெருந்தகை, பெருமாட்டியுடன் கழுமல நகரில் இருந்ததே” எனவினுவி “மண்ணில் நல்ல வண்ணம்” என்ற தலைப்பையுடைய திருப்பதிகத்தை அருளிச் செய்தார்.

பின்னர் பிள்ளையார் பாண்டி நாட்டிலுள்ள பல தலங்களை அரசருடனும் அமைச்சருடனும் சென்று வணங்கி அவர்களிடம் பிரியா விடைபெற்றுக்கொண்டு சோழநாடு வந்து சேர்ந்தார். திருக்கொள்ளம் பூதூர் சென்று வழிபாடு செய்ய நினைந்த பிள்ளையார், முள்ளியாற்றில் பெருவெள்ளம் கரைபுரண்டோடியதால், ஓடக்கோல் நிலையில்லாமையைக் கண்டு ஓடக்காரர் ஓடங்களைக் கரையில் நிறுத்திச் சென்றிருப்பதைப் பார்த்து அவற்றைக் கட்டவிழ்த்துவிடச் செய்து கண்ணுதலான் திருத்தொண்டருடன் தாமும் ஏறிக் “கொட்டமே கமழும்” என்ற தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடி நாவலமே கோலாக இருந்து ஓடங்களைக் கரை சேர்க்குமாறு செய்து திருக்கோயிலை அடைந்து வழிபாடாற்றினர்.

பிள்ளையார் திருத்தெளிச் சேரியை வணங்கிச் செல்லும்பொழுது சாக்கியர்கள் வாழும் போதிமங்கை குறுக்கிட்டது. அடியார்களது அரஹர வொலியும் திருச்சின்ன வொலியும் சாக்கியர்களது செவிகளிற்பட்டவுடன் அவர்கள் கனன்றெழுந்து அவர்களது தலைவனுயிருந்த புத்த நந்தி என்பவனிடம் சொல்ல அவன் அடியார்களைநோக்கி எம்மை வாதில்வென்றபிறகே இவ்வெற்றிச் சின்னங்களைப் பிடித்தல் வேண்டுமென்று வெகுண்டு சொன்னுன். உடனே பிள்ளையாரது திருப்பதிகங்களை ஏட்டில் எழுதி வரும் திருப்பணியாளரும் பிள்ளையாரது நன் மாமனுருமாகிய சம்பந்த சரணுலயர் என்னும் அன்பர் பிள்ளையாரது திருவாக்காகிய அத்திர மந்திரத்தை ஓதிப் புத்த நந்தியின் உத்தமாங்கங்கள் உரும்இடியினுல்உருண்டு விழக் கடவனவாக என்று மனம் பொருது கூறப் புத்தநந்தி தலையில் பேரிடியொன்று விழுந்து, அவன் இறந் தொழிந்தான். பின்னர் சாக்கியர்கள் சாரி புத்தன் என்பவனைத் தலைவனுகை வைத்துச் சம்பந்த சரணுலயருடன் சமய வாதம்செய்து தோற்றுப் பிள்ளையாரின் அடிபணித்தார்கள்.

பிள்ளையார் அப்பரடிகளைக் காணும் விருப்புடையவராய் அவர் திருப்பூந்துருத்தியில் தங்கியிருப்பதைக் கேள்வியுற்று அந்த திருத்தலத்தை நோக்கிப் புறப்பட்டார். பிள்ளையார் திருப்பூந்துருத்திக்கு அணித்தாக வரும் நற்செய்தியை அப்பரடிகள்கேட்டருளி "நந்தமையாளுடையவரை நாமெதிர் சென்றிறைஞ்சுவது முந்தை வினைப்பயன்" என்று முகமலர்ந்து பிள்ளையார் தமைச் சூழ்ந்த பெருங்கூட்டத்திடையில் ஒருவருங் காணுமல் நுழைந்து, சிவிகை தாங்குவாருடன் தாமும் சேர்ந்து அதனைத் தாங்கி வருவாராயினர். சிவிகையில் அமர்ந்திருந்த பிள்ளையார் "உடன் வந்தோரிடம் இப்பொழுது அப்பர் எங்குற்றூர் என வினவ உடனே அப்பரடிகள் ஒப்பரிய தவஞ்செய்தேன். ஆதலினல் உம்மடிகள் இப்பொழுது தாங்கி வரப்பெற்று உய்ந்தேன் என்று மறுமொழி கூறினர். கேட்ட பிள்ளையார் விரைந்து சிவிகையினின்றும் இறங்கி இவ்வாறு செய்தருளியது என்னென அப்பரடிகளை இறைஞ்ச அவரும் வேறு எவ்வாறு செயத்தகுவது என்று கேட்டு இறைஞ்சினர். இருவரும் திருப்பூந்துருத்திக்கு வந்து வழிபா

டாற்றினர். பிள்ளையாரிடம் பாண்டி நாட்டு நிகழ்ச்சிகளையும் வெற்றியையும் கேட்டறிந்த நாவுக்கரசர் கன்னிநாடு கண்டு தொழுங் காதல் கொண்டு பிள்ளையாரிடம் விடை பெற்றார்.

பிள்ளையார் தொண்டை நாட்டுத் தலங்களைத் தெரிசிக்கத் திருவுளங்கொண்டு வழியில் சீகாழியை வணங்கித் திருவண்ணாமலை முதலிய தலங்களைத் தெரிசித்துக் கொண்டு திருவோத்தூருக்கு வந்தார். அங்கு ஒரு சிவனடியார் வைத்திருந்த பனை மரங்களெல்லாம் ஆண் பனைகளாகி விட்டதையறிந்த சமணர்கள் அவரை இகழ்ந்து பரிகசித்தார்கள். அவர் அது பொறாராய்ப் பிள்ளையாரிடம் விண்ணப்பிக்கப் பிள்ளையார் "பூத்தேர்ந்தாயன" என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடி எல்லா ஆண் பனைகளையும் குரும்பைகளுடன் கூடிய பெண் பனைகளாகும்படி செய்தார். அது கண்ட சமணர்கள் வெட்கமுற்று அந்நாட்டை விட்டோடினார்கள்.

"கரந்தரும் பயன், உம்பர் நாயகர் பூசனை" என்பதனை உணர்த்த வரந்தரும்

பொருளாம் மலைவல்லி பூசித்த சிறப்பின தாகிய காஞ்சீபுரம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு திருவாலங்காட்டை யடைந்து காரைக்காலம்மையார் தலையாலே நடந்து போற்றிய திருத்தலம் அதுவாத லின் அதனை மிதிக்க அஞ்சிப் புறத்திலோர் பதியில் தங்கிப் பதிகம் பாடித் தொழுது திருக்காளத்தி சென்று வணங்கி அதற்கு வடதிசைத் தலங்களைப்பாடித் திருவொற்றி யூர் வந்து சேர்ந்தார் பிள்ளையார்.

மயிலாப்பூரில் சிவபத்தி, சிவனடியார் பத்தி மிக்கவராய்ச் சிவநேசர் என்னும் வணிகரொருவர் இருந்தார். பெருஞ் செல்வ ராகிய அவருக்கு அருந்தவங்கள் பல ஆற்றி யதன் பயனாக நல்ல வேளையில் ஒரு பெண் மகவு பிறந்தது. பூம்பாவை என்று பெயர் சூட்டப்பெற்று அழகு வளர்வதென அப் பெண்மணி வளர்ந்துவந்தாள். அந்தவேளை யில் திருஞான சம்பந்தப் பிள்ளையாரது திருவவதாரம், சிவஞானப்பேறு, பாண்டி நாட்டு வெற்றி ஆகியவற்றைக் கேள்வி யுற்றசிவநேசர், தாம் அரிதிற்பெற்றெடுத்து வளர்த்து வருகின்றபூம்பாவையைப்பிள்ளை

யாருக்கே கொடுத்ததாகச் சுற்றமும் கிளைகளும் கேட்பச் சொல்லி மகிழ்ந்தார்.

கன்னி மாடத்தில் பிள்ளையாருக்கென வளர்ந்து வந்த பூம்பாவை, ஒரு நாள் சேடியருடன் பூஞ்சோலைக்குச் சென்று பூக் கொய்யும்போது ஒரு நச்சரவம் அவளது கை விரலைக் கவர்ந்து நஞ்சை உகுத்தது. விடந்தொலைக்கும் விஞ்சையர்கள் மிகமிக முயன்றும் பயனில்லாது போயிற்று. பூம்பாவையின் உடம்பில் ஆவி தங்கியிருப்பதற்குரிய குறிகளும் இல்லாது போகச் சிவநேசர் பெருந்துயருற்றுப் பின்னர்த் தெளிந்து பிள்ளையாருக்கென்று இவளை உரைத்தமையால் நாம் துன்புறுதற்கிடமில்லை. இவ்வுடம்பைத் தழலிலிட்டுச் சாம்பரை எடுத்துப் பாதுகாத்து அவர் வருமவரை வைத்திருப்போம்" என்று கூறி அங்ஙனமே அச்சாம்பரை ஒரு குடத்திற் பெய்து கன்னிமாடத்தில் வைத்துப் பேணி வந்தார்.

பிள்ளையார் திருவொற்றியூரில் எழுந்தருளும்செய்திசிவநேசருக்குத்தெரிந்தது. மட்டற்ற மகிழ்ச்சி கொண்டு அவரைத்

தெரிசிக்கச் சிவநேசர் திருவொற்றியூரை நோக்கி வரும்போது பிள்ளையார் மயிலாப்பூரை நோக்கிச் சிவிகையில் வந்து கொண்டிருந்தார். சிவநேசர் பேருவகையுடன் எதிர்கொண்டழைக்கப் பிள்ளையார் மயிலாப்பூர்க் கபாலிச்சரத்துக்கு வந்து தொழுது பாடிப் பூம்பாவையின் என்பு நிறைந்த குடத்தை எடுத்துக்கொண்டு திருமதிற்புறவாயிலுக்கு வருமாறு சிவநேசருக்குக் கட்டளையிட்டார். அங்ஙனம் கொண்டுவந்த குடத்தைக் கபாலீச்சுரர் திருமுன்பு வைக்கச் செய்து "மட்டிட்ட புன்னை" என்னும் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பிள்ளையார் பாடத்தொடங்கிச் சமண் பாடலைப் பாடும் பொழுது குடமுடைந்து பூம்பாவை அது வரை சென்ற ஆண்டுகள் நிறையப்பெற்றுப் பன்னிரண்டு ஆண்டளவினளாய்ப் பேரழகு பொலிய எழுந்து நின்று பிள்ளையாரது திருவடிகளில் வீழுந்து வணங்கினாள். சிவநேசர் "அடியேன் பெற்ற பூம்பாவையை ஏற்றருள வேண்டும் என்று பிள்ளையாரிடம் வேண்டப் பிள்ளையார் நீர் பெற்ற பெண் விடத்தினால் வீந்தாள். இவள் யான் பெற்ற பெண். உமது உரை தகாது" என்று

திருவாய் மலர்ந்தருளினர். பூம்பாவை கன்னிமாடத்தில் தங்கியிருந்து ஆளுடைய பிள்ளையாரின் அடியிணைகளையேதுணையாகக் கொண்டிருந்து சிவத்தை மேவினள்.

பின்னர் பிள்ளையார் திருக்கழுக்குன்றம் முதலான தலங்களை வணங்கிச் சீகாழிக்கு எழுந்தருளினர். அப்போது திருமணப் பருவம் அவருக்கு வரச் சுற்றத்தார் அவரைத் திருமணத்திற்கிசைய வேண்டினர். வேதவொழுக்கம் நிலைநிற்பதற்காகச் சுற்றத்தாரின் வேண்டுகோளை யேற்றுத் திருமணத்துக்கு இசைந்தார் பிள்ளையார். திருநல்லூர்ப் பெருமணத்திலிருந்த நம்பாண்டார் நம்பி என்பவரின் திருமகளைப் பேசி முடித்து அத்திருத்தலத்தில் திருமணச் சடங்குகள் வேதவிதிப்படி நிகழ்ந்தன. திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் மங்கல வாழ்த்தொலி முழங்க மணமகளது கையைப் பற்றிக்கொண்டு இந்த இல்லொழுக்கம் வந்துசூழ்ந்ததே என எண்ணரிச் சுற்றத்தாரும் தொண்டர் குழாமும் புடைசூழத் திருக்கோயிலையடைந்து, "கல்லூர்ப் பெருமணம்" என்னும் தலைப்பையுடைய திருப்பதிகத்தை

ஓதியருளத் திருக்கோயிலில் ஒரு சோதி தோன்றியது. திருமணத்துக்கு வந்திருந்த அனைவரையும் அச்சோதியுட் புகும்படி கூறி அவர்களுக்குப் பேரின்பத்தை நல்கிக் காதலியைக் கைப்பற்றிக்கொண்டு தாமும் அச்சோதியிற் கலந்து சிவத்துடன் ஒன்றினார். அந்த நாள் வைகாசி மூல நன்னாளாகும்.

## திருநாவுக்கரசு சுவாமிகள் சரித்திரம்

திருச்சிற்றம்பலம்

திருநாவுக் கரசுவளர்
திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர்
வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ
லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய
வொண்ணாமை யுணராதேன்

திருச்சிற்றம்பலம்

— சேக்கிழார் பெருமான்.

தமிழகத்தில் காசியின் விழுமிதான திருமுதுகுன்றம், சிவபெருமான் அழற்பிழம்பாய்த் தோன்றிய திருவண்ணுமலை ஆதிய திருத்தலங்களைக்கொண்டதாய்ப் பெண்ணை நதிப் பெருக்கால் வளங்கொழிப்பதாய் இலங்குவது திருமுனைப்பாடி நாடு. இத் திருநாட்டில் சைவ நெறியை ஏழுலகுக்கும் பாலிக்கும் தன்மையினுல் தெய்வ நெறிச் சிவம் பெருக்கும் திருவாம் ஊராக விளங்குவது திருவாமூர். இவ்வூரில் நலம் வழுவாத நடையையுடைய வேளாளர் குலத்தில் குறுக்கையர் குடியென்பது மிகப்பெருமை வாய்ந்தது.

இந்த நற்குடியில் தோன்றிய புகழனு ரென்னும் பெருந்தகையார், மாதினியார் என்னும் மங்கை நல்லாரை மணந்து மனையறம் புரிந்து வந்தார். பெருஞ்செல்வமும் பேரறச் செயல்களும் படைத்த இவர்களுக்கு மனையறத்தின் பயனுகத் திலகவதியார் என்னும் பெயரிய பெண் குழந்தையொன்று பிறந்தது. பின்னர்ச் சில ஆண்டுகள் கழித்து அளவில்லாத கலைத்துறைகள் தழைக்கவும், அருந்தவத்தோர்களின் நெறி

வாழவும் உலகிருள் நீக்கும் ஒளிக்கதிர் போல ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தார் மாதினியார்.

குழந்தைக்கு மருணீக்கியாரென்னுந் திருப்பெயரைச் சூட்டிப் பருவந் தோறும் செய்யத்தக்க மங்கலச்சடங்குகளைச்செய்து பெற்ருேர் மகிழ்ந்தனர். மருணீக்கியார் அறிவு விளக்கத்திற்கான கலைகளையெல்லாம் முறையாகப் பயின்ருர். திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயது நிரம்பியது. அப்போது அவர் பிறந்த குறுக்கையர் குடியோடு ஒத்த குடிச் சிறப்புடையவரும் சிவனடித் தொண்டில் உண்மை விருப்புடையவரும் அரசரின் சேனைத் தலைவராயமர்ந்து அத் தொழிலில் சிங்க ஏறுபோல் விளங்குபவரும் பெரு வனப்புடையவருமாகிய கலிப்பகையார் என்பவர் திலகவதியாரை மணந்து கொள்ள விரும்பித் தக்கார் சிலரைப் புகழனரிடத்து அனுப்பினர். அவர்கள் விருப்பப்படி திலகவதியாரைக் கலிப்பகையாருக்குத் திருமணஞ் செய்து கொடுக்கப் புகழனர் இசைந்தார்.

திருமணம் நிகழ்வதற்கு முன், அரசனுக்கு வட திசையில் ஒரு போர் மூண்டது. போர்க்களஞ் சென்று வினை யாற்றி வரும்படி அரசன கலிப்பகையாரை ஏவினுன். அவ்வாறே போருக்குச் சென்ற கலிப்பகையார் மாற்றரசர் படைகளுடன் நெடுநாட்கள் போரிட்டுக் கொண்டிருந் தார்.

இடை நாளில் புகழனுர் யாக்கை நிலை யாமையை யாவருக்கும் உணர்த்துவார் போல இவ்வுலக வாழ்வை நீத்துப் பிரிய, மாதினியாரும் சுற்றத்தார் மக்களைத் துக ளாக எண்ணிக் கற்பு நெறி வழுவாமல் கணவனுரோடு சென்ருர். பெற்ருேரிருவ ரும் பிரிந்ததாலுண்டாகிய பெருந்துக்கம் பிள்ளைகளிருவரையும் மிகவும் வருத்தியது. உற்ருர் உறவினர் தேற்ற ஒருவாறு தேறிப் பெற்ருேருக்குச் செய்ய வேண்டிய நீர்க் கடன் முதலியவற்றை மருணீக்கியார் செய்து முடித்தார். சில நாட்கள் சென்ற பிறகு, போர்க்களத்திற் பகைமுனை மேற் சென்ற கலிப்பகையார் வீர சுவர்க்கம் அடைந்தாரென்று செய்தி வந்தது.

இதனைக் கேட்ட திலகவதியார் என் பெற்றோர்கள் என்னை அவருக்குத் திருமணஞ் செய்து கொடுக்க இசைந்திருந்தார்கள். அதனால் நான் அவருக்கே உரியவள். ஆதலினால் இந்த உயிரை அவர் உயிரோடு இசைவிப்பேன் என்று துணிந்தார். அது கண்ட மருணீக்கியார் திலகவதியாரின் அடியிணைகளில் விழுந்து வணங்கி, "நமது பெற்றோர்கள் பிரிந்த பின்பும் உம்மை வணங்கும் பேறு எனக்கு இருந்ததனாலேயே இதுவரை உயிர் தரித்திருந்தேன். என்னைத் தனியே கைவிட்டேகுவீராயின், யானும் உமக்கு முன்னால் உயிர் விடுவேன்" என்று கூறினார். தம்பியார் உளராக வேண்டுமென வைத்த தயாவினால் திலகவதியார் அம்பொன் மணி நூல் தாங்காது, ஆருயிரையும் அனைத்துயிர்களிடத்தும் வைத்த அருளையும் தாங்கி மனைத்தவம் புரிந்து வாழ்ந்து வந்தார்.

கசடறக் கற்ற கல்வியறிவின் பயனாக "உலகியல்பு நிலையில்லாதது" என்பதை மருணீக்கியார் நன்குணர்ந்தார். அதனால் அவரது முன்னோர்கள் தேடி வைத்திருந்த செல்வத்தையெல்லாம் அறச்சாலைகள்,

தண்ணீர்ப் பந்தர்கள், குளங்கள் ஆகிய வைகளை அமைப்பதற்குச் செலவு செய்து ஈகைத் துறையில் இணையற்று விளங்கினர். துறவு நெறியில் நின்றெழுகி நற்பேறு பெற வேண்டுமென்ற விருப்பமும் உண்டாயிற்று.

ஆன்மாக்கள் மேற்கொள்ளும் முயற்சி களில் ஆண்டவனது திருவருளும் உடன் கூடித் துணை செய்தாலன்றிக் குறித்தபடி வெற்றியடைய முடியாது. துறவு நெறியில் நாட்டங் கொண்ட மருணீக்கியாருக்கு இறைவன் திருவருள் உடன் கூடும் பருவம் அப்போது வராமையால், "கொல்லாமை" என்ற புறப் போர்வையினுள் மறைந்து நின்ற சமண சமயத் துறவை அவர் மேற் கொள்ள வேண்டியவராயினர்.

பாடலிபுத்திரம் என்னும் இடத்திலி ருந்த சமண் பள்ளியில் துறவு பூண்டு வாழ்ந்த மருணீக்கியார் அச் சமண சமய நூல்கள் எல்லாவற்றையும் கற்றுணர்ந்து மிக மேம்பாடுடையவராய் விளங்கியமை யால் அவர்கள் அவருக்குத் தருமசேனர் என்னும் பெயர் கொடுத்து அவரைத் தங்கள் சமயத் தலைவராக வைத்துப் போற்றி வந் தார்கள்.

திலகவதியார் உலகியற் பந்தங்களை ஒழித்துச் சிவபெருமான் திருவடித் தொண்டையே பொருளெனக் கொண்டு திருவதிகை வீரட்டானத்துக்கு வந்து திருநீறு, உருத்திராக்கம், திருவைந்தெழுத்து ஆகிய சிவ சின்னங்களைத் தாங்கி வீரட்டானேசுவரர் திருக்கோயிலில் அலகிடுதல், மெழுகுதல், மலர் கொய்து வந்து மாலைகள் தொடுத்துக் கொடுத்தல் முதலிய கைத் திருத் தொண்டுகளைச் செய்து வந்தார். மருணீக்கியார் பொய்ச் சமயமாகிய சமண சமயத்திற் புகுந்து வாழ்வது திலகவதியாருக்குப் பெருங் கவலையைத் தந்தது. அவரைப் பரசமயக் குழியினின்றும் எடுத்தளிக்கும்படி வீரட்டானேசுவரரைப் பலகாலும் வேண்டி வந்தார் திலகவதியார் கனவில் சிவபெருமான் தோன்றி "உன் உடன் பிறந்தான், முன்னமே முனியாகி எமை அடையத் தவம் முயன்றவன். அன்னவனை இனிச் சூலை மடுத்து ஆளுவோம். உன்னுடைய மனக்கவலை ஒழி நீ என்று அருள் செய்தார்.

சமண் பாழியிலிருந்த தரும சேனரைச் சூலை நோய் பற்றி வருத்தத் தொடங்கியது

வடவனலும் கொடுவிடமும் போல அந்நோய் அவரது குடரைப் பற்றிக் குடைந்து துன்புறுத்தச் சமணர்கள் அனைவரும் ஒன்று கூடி நோய் நீக்கங் குறித்து வேறு வேறு வகைப்பட்ட பற்பல முயற்சிகளைச் செய்தனர். அவையனைத்தும் பயனில்லாது போகவே அவர்களெல்லோரும் தருமசேனரைக் கைவிட்டுத் தத்தம் இடங்களுக்குச் சென்றனர்.

இறைவன் திருவருள் கைகூடும் பருவம் மருணீக்கியாருக்கு நெருங்கி வரச் சூலை நோயில் துடித்துக் கொண்டிருந்த அவருக்குத் திலகவதியாரின் நினைவு உண்டாயிற்று. உடனே தமது மடைப்பள்ளியிற் பணிபுரியும் ஊட்டுவானை அழைத்துத் திலகவதியார்பாற் குறிப்புணர்த்தி வரும்படி அனுப்பினுர்.

அவன் திருவதிகைக்கு வந்து சேர்ந்த வைகறைப் பொழுதில் அம்மையார் திருநந்தன வனத்தில் மலர் கொய்து முடித்துப் புறத்தில் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களைக் கண்டு அவன் மருணீக்கியார் ஏவலினுல் வந்தேன் என்று சொல்ல அங்கு ஏதே

னும் தீங்குளதோ என அம்மையார் அவனிடம் வினவினர்கள். அவன் அவருக்கு வந்த சூலே நோய் அவரைக் கொல்லாது துன்புறுத்துகிறது அது தீராமை கண்டு சமணர்கள் எல்லாரும் கைவிட்டார்கள். அவருக்கு முன் பிறந்த நல்லாராகிய உம்மிடம் அவர் உய்யுமாறு யாது எனக் கேட்டு வரும்படி என்னே அனுப்பினர் என்ருன். கேட்ட திலகவதியார் "நன்றறியா அமண் பாழி நண்ணுகிலேன்" என்பதை அவனிடம் சொல் என்று கூற அவன் தருமசேனரை யடைந்து அதனேச் சொன்ஞன்.

உடனே மருணீக்கியார் திருவதிகையை அடைந்து திலகவதியார் திருவடிகளேச் சேருவதே நோய் நீக்கத்திற்கு வழி என்று துணிந்தார். இத்துணிவு அவருக்கு இருந்த அயர்வைச் சிறிது ஒதுக்கி வைக்க உடுத்துழன்ற பாயும் உறியுற்ற குண்டிகையும் தொடுத்த பீலியும் ஒழிய வெள்ளாடை புனேந்து சமண்பாழி நீங்கி இராப்பொழுதிற் புறப்பட்டுத் திருவதிகை வந்து திலகவதியார் திருமடத்தை அடைந்தார்.

திலகவதியாரது திருவடிகளில் விழுந்து வணங்கி "நந்தமதுகுலஞ் செய்த நற்றவத்தின் பயனனையீர்! எனக்கு வந்துள்ள இந்தச் சூலை நோய்க் கிடைந்து உம்மை வந்தடைந்தேன். இனி யானுய்ந்து கரையேறும் நெறியைக் காட்டியருளல் வேண்டுமென வேண்டினர். தாளிணைகளில் விழுந்த தம்பியாரைப் பார்த்து ஆளுடைய பெருமானது அருளை நினைந்து கை தொழுது "அறியாமையால் பரசமயக்குழியில் விழுந்து இந்தத் துயரத்தை அடைந்தீர். இனிப் பற்றறுப்பார்தமைப் பணிந்து பணி செய்வீர்" என்று திலகவதியார் உபதேசித்துக் "கயிலைக் குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத்து ஓதி அவருக்குக் கொடுத்தார்.

திருவாளன் திருநீற்றைத் திலகவதியார் அளிப்ப மருணீக்கியார் பெருவாழ்வு வந்ததென அதைப்பணிந்து பெற்று உடம்பு முழுவதும் அணிந்துகொண்டு அம்மையாருடன் திருப்பள்ளி யெழுச்சி வேளையில் வீரட்டானேசுவரர் திருக்கோயிலுக்குச் சென்று வழிபாடாற்றினர். திருவருளால் தமிழ்மாலைகள் சாத்தும் உணர்வு அவருக்கு உண்டாயிற்று.

" கூற்ருயினவாறு விலக்ககிலீர் " என்னும் திருப்பதிகத்தை ஓதித்தமதுசூலைநோயைத் தவிர்த்தருள வேண்டுமென வீரட்டானேசுவரரை வேண்டிக்கொண்டார். சூலை நோய் நீங்கிற்று. உடன் பிறந்தாரிருவரும் இறைவன் திருவருளை வியந்தேத்தி இன்புற்றனர். புறச் சமயப் புன்குழியிலிருந்தேறி, மலையாள் மணவாளன் மலர்க் கழல்களை வந்தடையும் வாழ்வு தந்த சூலை நோய்க்கு என்ன கைம்மாறு செய்வேனென நினைந்து மருணீக்கியார் சிவபெருமானது திருவடிகளை ஏத்திஞர்.

வீரட்டானேசுவரர் செந்தமிழ்ச் சொல் வளச் சீர்ப்பதிகத் தொடை சாத்தியதற்கு மகிழ்ந்து " நாவுக்கரசு என்று உலகு ஏழினும் நின்னுமம் நயப்புற மன்னுக " என்று எல்லாருங் கேட்க வானிடையே ஒரு அசரீரி வாக்கை எழுப்பிஞர். திருநாவுக்கரசு சுவாமிகள் திலகவதியம்மையாரைப்போலக் கைத் திருத்தொண்டு செய்யும் விருப்பினராய்த் திருமேனியில் சிவ சின்னங்கள் விளங்கத் தியானமருத உணர்வும் கைத்தலத்தில் உழவாரப் படையுங் கொண்டு

திருவதிகையில் தங்கித் திருத்தொண்டு செய்து கொண்டிருந்தார்.

அவர் பாடலிபுத்திரத்தை விட்டுத் திருவதிகைக்கு வந்து மீண்டும் சைவரா யிருக்கும் செய்தியை யறிந்த சமணர்கள் பொருமை கொண்டு ஒருங்கு கூடி "இச் செய்தியை அரசன் அறிந்தால் உண்மை யுணர்ந்து அவனும் சைவனுகி நம் விருத்தி யைத் தவிர்ப்பான்; அங்ஙனம் நேராதபடி ஓர் வஞ்சனையை மேற்கொள்ள வேண்டும்" என்று முடிவு செய்து அரசனிடம் சென்று "தருமசேனர் சைவ நெறியில் நிற்கும் தமக்கையை அடைய எண்ணிப் பொய் யாகச் சூலைநோய் வந்தது போல நடித்து, அது இங்கே நீங்கவில்லை என்னுஞ் சூழ்ச்சி யினுல் திருவதிகையை அடைந்து சைவராகி நமது சமயப் பழிப்பும் தெய்வ நிந்தையும் செய்தார்" என்று சொன்னுர்கள். அது கேட்ட பல்லவ மன்னன் உளம் வெகுண்டு அவர்களை நோக்கி இதற்கு என்ன செய்ய லாம் என்று வினவ அவர்கள் "உன்னு டைய நிலைநின்ற நெறியை அழித்த அந்தப்

பொறியிலியைத் தண்டனைக் குள்ளாக்கு தலே முறை" என்று கூறினர்.

அமைச்சர்களும் படை வீரர்களும் திரு வதிகைக்கு வந்து சுவாமிகளிடம் அரசன் அவரை அழைப்பதாகக்கூறினர். சுவாமிகள் "நாமார்க்கும் குடியல்லோம்" என்னும் தலைப்பையுடைய திருத்தாண்டகத் திருப் பதிகத்தைப் பாடி "நீர் நம்மை அழைக்கும் அடைவு இல்லை" என்று உடன் வர மறுத் துப் பின்பு அவர்கள் வேண்டுகோளுக் கிணங்கி அவர்களுடன் சென்றார். அரசன் சமணர்களை அழைத்து இனி என்ன செய்ய லாமென்று கேட்க அவர்கள் சுவாமிகளை நீற்றறையிலிடும்படி கூறினார்கள். மன்னன் அங்ஙனமே உத்தரவிட்டான்.

சுவாமிகள் நீற்றறையில் அடைத்துப் பூட்டப்பெற்றார். அங்கே சுவாமிகள் அம் பலத்தில் ஆனந்தக் கூத்தாடும் அண்ணலா ரின் தாள் நிழலைத் தலைக்கொண்டு "மாசில் வீணையும்" என்னும் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடித் திருவருளையே சிந்தித்துக் கொண்டிருந்தாராதலின், அது

அவருக்குப் பூம்பொய்கை போலக் குளிர்ச்சியை வழங்கியது. ஏழு நாட்கள் சென்றபிறகு நீற்றறையைத் திறந்துபார்த்தனர். ஊனமொன்றுமின்றி உள்ளேயிருந்த சுவாமிகளைக் கண்டு வியந்து "இது அமண் சமயச் சாதகத்தால் விளைந்தது" என்று கூறிச் சமணர்கள் அவருக்கு நஞ்சு ஊட்ட வேண்டுமென்று அரசனிடம் சொன்னார்கள். அதன்படி நஞ்சு கலந்த பாற்சோற்றை அவருக்கு ஊட்ட நஞ்சும் அமுதாம் எங்கள் நாதனடியாருக்கு என்று சொல்லிச் சுவாமிகள் அதனையுண்டு அற்புதம் விளைத்தார்.

இவ்விரண்டு செயல்களாலும் தங்கள் கருத்தை நிறைவேற்றிக்கொள்ள முடியாது நின்ற சமணர்கள் "சுவாமிகளைக் கொல் களிற்றின் எதிரில் விடுவதே இனிச்செய்யத் தக்கது" என்று சொல்ல அங்ஙனமே செய்யுமாறு அரசன் ஆணையிட்டான்.

யானைக்குப் பெருங்கோபத்தை உண்டாக்கிச் சுவாமிகள்பால் ஏவினார்கள். கோபாதிசயமான கொலைக் களிறு தம்மை நோக்கி வருவதைக் கண்ட சுவாமிகள்

சுண்ணவெண் சந்தனச்சாந்தும்'' என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடி "அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை'' என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தை அருளிச் செய்தார். வந்த யானை சுவாமிகளை வலம் வந்து அவர் திரு முன்னுகத் தாழ்ந்திறைஞ்சி யெழுந்து சுவாமிகளிடம் ஏவிய பாகர்களை யெல்லாம் கொன்று சமணர்களையும் துரத்தி அழிக்கத் தலைப்பட்டது.

பின்பு சமணர்கள் பல்லவனிடம் "சுவாமிகளைக் கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலிற்போடுவதே முறை'' என்று கூறினர். அவ்வாறே சுவாமிகள் கல்லோடு கட்டப் பெற்று நடுக்கடலினுள் விடப்பெற்றார். அப்போது அவர் "சொற்றுணை வேதியன்'' என்னுந் தலைப்பையுடைய நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாடியருளினர். நல்வினை தீவினையாகிய கயிறுகளைக் கொண்டு ஆணவம், கன்மம், மாயையாகிய மூன்று கற்களோடு பிணைத்துக் கட்டப்பெற்றுப் பிறவிப் பெருங் கடலில் வீழ்ந்துள்ள உயிர்களைக் கரையேறும்படி செய்யும் திருவைந்தெழுத்து, இந்தச் சிறு கடலில் ஒரு கல்லு

டன் ஒரு கயிற்ருற்பிணித்து வீழ்த்தப்பெற்ற சுவாமிகளைக் கரை சேர்ப்பது வியப்பல் லவே! சுவாமிகளுடன் பிணைந்த கல்லே புணையாயிருந்து அவருக்கு உதவத் திருப் பாதிரிப்புலியூருக்கருகில் கரையேற விட்ட குப்பத்தில் சுவாமிகள் கரையேறினர், இத னைக்கண்ட மெய்யன்பர்கள் அரஹர வொலி யெழுப்பி ஆரவாரித்து வணங்கினார்கள்.

சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூரில் எழுந் தருளியுள்ள பெருமானை "ஈன்ருளுமாய்" என்னும் தலைப்புடைய திருப்பதிகம் பாடித் துதித்துத் திருவதிகைக்குப் புறப்பட்டார். அதிகைவாழ் மக்கள் பெருமகிழ்ச்சியுடன் அவரை வரவேற்றுப் போற்றினர். பல்லவ மன்னன் ஆளுடைய அரசரது பெருமையை உணர்ந்து, சமணர்களை விட்டு அவரை வந் தடைந்து பணிந்து சைவனுகிச் சமண்பாழி களையும் பள்ளிகளையு இடித்துக்கொணர்ந்து விரட்டானேசுவரருக்குக் குணபரவீச்சுரம் என்னும் திருக்கோயிலை எடுப்பித்தான்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவெண் ணெய் நல்லூர் முதலிய தலங்களை வணங்

கிக்கொண்டு திருத்தூங்கானை மாடமென்னுந் திருத்தலத்துக்கு வந்து இறைவனிடம் புன்னெறியாகிய சமணெறியில் தொடக்குண்ட இவ்வுடம்புடன் யான் உயிர் வாழத் தரியேன். இவ்வுடம்பில் உனது இலச்சினையைப் பொறித்து உயிர் வாழும்படி செய்தல் வேண்டுமென்று பிரார்த்தித்து, "பொன்னார் திருவடிக்கு" என்னுந் தலைப்புடைய திருப்பதிகத்தைப் பாடினார். திருவருளால் ஒரு சிவபூதம் தோன்றி அவருடைய தோள்களில் சூல இடப இலச்சினைகளை யிட்டது.

பிறகு சுவாமிகள் ஆனாத சீர்த்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற பெருமானாரின் அடிகளை வணங்கி ஊனாலும் உயிராலும் உள்ள பயன் கொள்ள நினைந்து தில்லைப் பதியை வந்தடைந்தார், பேரார்வத்துடன் பெருமானைத் தொழுது திருநேரிசை திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் முதலியன பாடி உழவாரத் திருத்தொண்டு செய்து இன்புற்றுத் திருக்கழிப்பாலை முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு சீகாழி வந்து சேர்ந்தார்.

சுவாமிகளின் வருகையைக் கேட்ட திருஞானசம்பந்தப் பிள்ளையார் அவரை எதிர்கொண்டு வரவேற்கச் சுவாமிகள் பிள்ளையாரது திருவடிகளிற் பணிந்தார். பிள்ளையார் சுவாமிகளின் திருக்கரங்களைப் பற்றிக்கொண்டு, "அப்பரே" என அவரும் "அடியேன்" என்றார். அதுமுதல் சுவாமிகளை அனைவரும் அப்பர் என்றழைத்தனர். இருவரும் திருக்கோயிலுக்குச் சென்று வழிபாடாற்றினர்.

சுவாமிகள் திருவாவடுதுறை முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருநல்லூரை அடைந்து, திருக்கோயிலுக்கு வந்து பெருமானை வணங்கி மகிழ்ந்து எழும்பொழுது, உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்று அவர்தம் சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்.

திருவடி தீட்சை பெற்றுப் பேருவகை அடைந்த திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பழனம் சென்று வணங்கி அருகிலுள்ள மற்றைத் தலங்களையும் வணங்கும் விருப்பத்துடன், அந்தணரின் மேம்பட்ட அப்பூதி

யடிகளாரது திங்களூரை வந்தடைந்தார். அப்பூதியடிகள் அவர் பெற்ற பிள்ளைகளுக்கும் சாலை, குளம், கிணறு, தண்ணீர்ப்பந்தர் முதலியவற்றிற்கும் " திருநாவுக்கரசு " என்னும் திருப்பெயர் சூட்டியிருப்பதைக் கேட்டுச் சுவாமிகள் அவரது திருமனைக்குச் சென்றார்.

காண்டகைமை இன்றியுமுன் கலந்த பெருங்கேண்மையினராய் அன்பு கொண்ட அப்பூதியடிகள் சுவாமிகளைக் கண்டவுடன் மனைவி மைந்தர்களோடும், சுற்றத்தார்களோடும் களிகூறத் தொழுதெழுந்து தமதில்லத்தில் திருவமுது கொள்ள வேண்டுமென்று வேண்டிச் சுவாமிகளின் இசைவு பெற்றுப் போனகமும் கறியமுதும் அமைத்துச் சுவாமிகள் திருவமுது கொள்ளுவதற்கு வாழைக் குருத்து அரிந்து வரும்படி தமது பிள்ளைகளில் மூத்த திருநாவுக்கரசை அனுப்பினார்.

அவன் சென்று வாழைக் குருத்தை அரியும்போது ஒரு நாகம் அவன் கையில் தீண்ட அதை அவன் பேசாமல் வாழைக்

குருத்தைக் கொண்டு விரைந்து வந்து தாயாரிடம் கொடுத்துவிட்டு விடம் தலைக் கேறத் தரையிலே விழுந்தான். அது கண்ட அப்பூதியடிகளாரும் அவரது மனைவியாரும், "அடியவர் இனி இங்கு அமுது செய்ய மாட்டாரே" என்று மனம் வருந்திப் புதல்வன் சவத்தை மறைத்து அதனால் வந்த தடுமாற்றம் சிறிதும் இல்லாதவர்களாகிச் சுவாமிகளைத் திருவமுதுக்கு அழைத்தார்கள்.

சிவபெருமான் திருவருளால் அங்கு நடந்த நிகழ்ச்சிகளைச் சுவாமிகள் அறிந்தருளி மறைத்து வைத்த சவத்தைத் திருக்கோயிலின் முன் கொணரச் செய்து, "ஒன்று கொலாம்" என்னும் தலைப்பை யுடைய் திருப்பதிகத்தைப் பாடியருள விடம் நீங்கி மூத்த திருநாவுக்கரசு எழுந்திருந்தான். சுவாமிகள் அப்பூதியடிகள் இல்லத்தில் திருவமுது கொண்டு அவரிடம் விடை பெற்றுத் தல யாத்திரைக்குப் புறப்பட்டார்.

திருப்புகலூர் முதலிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டு அங்கு எழுந்தருளி வந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாருட

னும் அடியார்களுடனும் சுவாமிகள் திருவீழி மிழலையை வந்தடைந்தார். சுவாமிகளும் பிள்ளையாரும் வீழி இறைவரை வணங்கிக் கொண்டு அங்கே எழுந்தருளியிருந்தார்கள் அப்போது மழைவளஞ் சுருங்கிப் பஞ்சம் உண்டாயிற்று. வீழி நாயகர் கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்திலும் பஞ்சந் தீரும்வரை நாடோறும் படிக்காசுகள் வைத்து இருவரது திருமடங்களிலும் சிவனடியார்களுக்குக் குறைவின்றித் திருவமுதளித்துவர அருள் செய்தார். பிள்ளையார் இறைவனது திருமாமகனார் ஆதலினால் அவர் பெற்ற காசு வாசியுடன் கூடியதாக ஆயிற்று. சுவாமிகள் கைத்திருத்தொண்டு செய்பவராதலால் அவர் பெற்ற காசு வாசியில்லாததாக இருந்தது.

பின்னர் சுவாமிகளும் பிள்ளையாரும் திருமறைக்காட்டுக்கு வந்தார்கள். அங்கு வேதங்கள் பூசித்துத் திருக்காப்பிட்டு வைத்திருந்த திருக்கோயிலின் அபிமுகத் திருவாயிற் கதவைத் திறக்கும்படி பதிகம்பாடியருள வேண்டுமென்று சுவாமிகளிடம் பிள்ளையார் வேண்டினர். சுவாமிகள்

"பண்ணினேர் மொழியாள்" என்னும் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடத் தொடங்கி ஒன்பது திருப்பாடல்களை ஓதியும் கதவு திறக்கப் பெறவில்லை. பத்தாவது திருப்பாடலில் "இரக்கம் ஒன்றிலீர் எம் பெருமானீரே" என்னுஞ் சொற்றொடரை அமைத்துச் சுவாமிகள் பாடியதும் திருக்கதவம் திறந்தது. இருவரும் அவ்வாயிலின் வழியே உட்சென்று பெருமானை வழிபட்டார்கள். சுவாமிகள் பிள்ளையாரிடம் இந்தக் கதவு எப்போதும் திறக்கவும் அடைக்கவுமாயிருக்கும்படியும் இப்போது கதவு திருக்காப்புப் பெறவும் பதிகம் பாட வேண்டுமென்று வேண்டப் பிள்ளையார் அவ்வாறே பாடித் திருக்காப்புச் செய்தருளினர்.

அன்றிரவு வாகீசமுனிவர் திருமடத்தில் துயில் கொண்டிருந்தபொழுது, மறைக்காட்டுறையும் மணாளன் வெண்ணீறு புனைந்த திருமேனியுடன் அவர் முன் தோன்றி "வாய்மூரில் இருப்போம் தொடரவா" என்றான் சுவாமிகள் எழுந்து வேதவனத்தைப் புறகிட்டு விரைந்து செல்லப் பெருமான் முன்காட்டிய அவ்வேடத்துடன்

சுவாமிகளை அழைத்துச் சென்று ஒரு திருக் கோயிலைக் காட்டி அதனுட் புகுந்து மறைந் தான். சுவாமிகள் "எங்கே என்னை" என்னுந் தலைப்பையுடையதிருப்பதிகத்தைப் பாடி அப்போது அங்கு வந்த திருஞான சம்பந்தப் பிள்ளையாரை, அவர் கதவடைக் கப் பாடிய திறத்தை வைத்துக் குறிப்பிட்டு வாய்மூர்ப் பெருமானை வணங்கினார்.

பின்னர் இருவரும் திருமறைக்காட்டுக்கு வந்து சில நாட்கள் தங்கி யிருந்தார்கள். பாண்டிமாதேவியாரின் விருப்பத்தை யேற்றுப் பிள்ளையார் அந்த நாட்டில் பரவி யிருந்த சமண மாசை யொழித்துச் சைவ நெறியை நிலைநாட்டப் புறப்பட்டுச் சென் றார், சுவாமிகள் பழையாறை வடதளியி லுள்ள திருக்கோயிலுக்குச் சென்று வழிபட எண்ணி அங்கே போனார். சமணர்கள் அந்தத் திருக்கோயிலை மறைத்து வைத்தி ருந்தார்கள். "வண்ணங்கண்டு நானும்மை வணங்கியன்றிப் போகேன்" என்று சுவாமி கள் உண்ணாவிரத மிருந்தார்கள். சிவபெரு மான் அரசனது கனவில் தோன்றிச் சமணர்கள் தம்மை மறைத்திருப்பதையும்

நாவரசர் கும்பிடக் காத்திருப்பதையும் உணர்த்த, அவன் விரைந்து அங்கு வந்து வஞ்சகஞ் செய்த சமணர்களை யொழித்துத் திருக்கோயிலை விளக்கம் செய்து அன்று சுவாமிகளும் பின்னர் நம்மனைய அனைவரும் வழிபாடு செய்யும்படி வைத்தான்.

திருப்பைஞ்ஞீலியை வழிபடச் சுவாமிகள் செல்லும் பொழுது, வழிநடை இளைப்பால் அவருக்கு உண்டாகிய நீர் வேட்கையையும் பசியையும் இறைவன் திருவுளங்கொண்டு வழியில் ஒரு சோலையையும் குளத்தையும் உண்டாக்கித் தாம் ஒரு அந்தணராய்ப் பொதி சோறு வைத்துக் கொண்டு காத்திருந்தார். சுவாமிகள் அவ்விடத்தையடைந்ததும் இறைவன் பொதி சோற்றைக் கொடுத்து உண்டு பசி தீரவும் குளத்து நீரைக் குடித்து இளைப்பாறவும் செய்து அவருடன் திருப்பைஞ்ஞீலிக்குத் தாமும் வருவதாகக் கூறி உடன் வந்து, ஊர் நெருங்கியதும் மறைந்தருளினர். சுவாமிகள் இறைவனது பெருங்கருணைத் திறத்தை எண்ணி இன்புற்றார்.

பிறகு சுவாமிகள் தொண்டை நாட்டுத் தலங்களை வணங்கிக் கொண்டு, திருக்காளத்தி, திருப்பருப்பதம் ஆகியவற்றைத் தொழுது திருக்கயிலாயஞ் சென்று வணங்கும் விருப்பத்துடன் வடக்கேயுள்ள வாரணாசியைப் பணிந்து வழிக்கொண்டார். மனிதர்கள் செல்ல முடியாத வழியில் உணவுறக்கமின்றிப் பல நாட்கள் தனித்து நடந்து செல்லக் கால்கள் பரட்டளவும் தேய்ந்தன. பிறகு கைகளைத் துணைக் கொண்டு தாவிச்சென்ருர். கைகள் மணிக் கட்டளவும் தேய்ந்துபோயின. பின்னர் மார்பினுல் உந்திச் சென்ருர் மார்புச் சதையும் நைந்து சிந்தியது. அதன்மேல் புரண்டு புரண்டு போனுர். உடம்பின் புறவுறுப்புக்கள் அழிந்து நைந்தபடியால் அயர்வு மிகுந்தது. செயலற்று ஓரிடத்தில் தங்கினுர்.

அந்த இடத்தில் சிவபெருமான் ஒரு தடாகத்தை உண்டாக்கி வைத்துத் தாமொரு முனிவர் வேடங் கொண்டு, சுவாமிகள் முன்னே தோன்றி, “ இவ்வாறு உடலை வருத்தி இங்கே வந்த காரணமென்ன” என்று வினவச், சுவாமிகள்

"அண்டர் நாயகர் மலைமகளுடன் வடகயிலை யிலிருக்கும் பரிசு கண்டு கும்பிட அடியேன் கொண்ட குறிப்பு இது" என்று கூறினர். முனிவர் "கயிலைவரை மானுடர் அடைவதற் கெளியதன்று. மீளுவதே உமது கடமை" என்று சொன்னர். சுவாமிகள் "ஆளும் நாயகன் கயிலையில் இருக்கைகண்டல்லால், மாளும் இவ்வுடல்கொண்டு மீளேன்" என்று மறுத்தார். உடனே முனிவராக எழுந்தருளிய சிவபெருமான் உருக்கரந்து மறைந்து நின்று, "நாவினுக் கரசனே! எழுந்திரு" என்று சொல்லத் தீங்கு நீங்கிய யாக்கை கொண்டு சுவாமிகள் எழுந்திருந்து, கயிலையிலிருந்த கோலம்கண்டு தொழ அருள் புரிய வேணடுமென்று பிரார்த்தித்தார். இந்தப் பொய்கையில் மூழ்கித் திருவையாற்றிற் கயிலைக் காட்சியைக்காண்க என ஓர் அசரீரி வாக்கெழுந்தது. அதன்படி சுவாமிகள் அந்தப் பொய்கையில் மூழ்கித் திருவையாற்றுத் திருக்கோயிலினுள் உள்ள திருக்குளத்தில் எழுந்து ஐயாறுடைய நாயகரைப் பணிந்து அங்குள்ள நிலைத்திணையும் இயங்கு திணையு மாகிய அனைத்தும் சிவசக்திகளின் வடிவ மாகத் தோன்றக் கண்டு, "மாதர்ப் பிறைக்

கண்ணி யானை'' என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

பின்பு சுவாமிகள் திருப்பூந்துருத்தியை அடைந்து, அங்கு திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம் ஒன்று அமைத்துத் தங்கி யிருந்தார். அப்போது திருஞான சம்பந்தப் பிள்ளையார் அந்தத் திருத்தலத்திற்கு எழுந் தருளி வர, நாவரசர் எதிர் சென்று அவரது சிவிகையைத் தாங்கி வந்தார் அப்போது பிள்ளையார் எங்குற்றார் அப்பர் என, நாவர சர், "அடியேன் உம் அடிகள் தாங்கி வரும் பெருவாழ்வு வந்தெய்தப் பெற்று இங்குற் றேன்'' என்றார் உடனே பிள்ளையார் சிவிகையிலிருந்து இறங்கி நாவரசரை வணங்க, அவரும் வணங்கினார். இருவரும் பூந்துருத்திப் பெருமானை வணங்கினர். சுவாமிகள், ஞானசம்பந்தப் பிள்ளையார் மதுரையில் சிவநெறியை நிலைநாட்டிய செய்தி முதலியவற்றை அவர் சொல்லக் கேட்டுப் பாண்டி நாட்டுத்தலங்களை வணங்க விரும்பி மதுரைக்கு வந்து பதிகம் பாடித் தொழுது, திருப்பூவணம் முதலிய தலங்களை

வணங்கிக் கொண்டு பூம்புகலூரை வந்தடைந்தார்.

அந்தத் திருத்தலத்தில் தங்கியிருந்து பதிகங்கள் பாடி இறைவனை வணங்கி உழவாரத் தொண்டைச் செய்து வந்த சுவாமிகள், ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கும் இயல்புடையவர் என்பதை உலகத்தார்க்கு உணர்த்த உழவாரம் நுழைந்த இடங்களிலெல்லாம் பொன்னும் நவமணிகளும் பொலிந்திலங்கும்படி ஆண்டவன் அமைத்து வைத்தான். சுவாமிகள் அவற்றைக் கல்லோடும் மண்ணோடும் சேர்த்துப் புறத்தே எறிந்தார்கள். வான நாட்டு அரம்பையர்கள் அவர் முன்னே தோன்றி ஆடல் பாடல்களைச் செய்ய அதனால் ஒரு சிறிதும் சித்த நிலை திரியாது திகழ்ந்த சுவாமிகள் ஒரு சித்திரை மாதத்துச் சதய நன்னாளில் "எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனே" என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடி நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி, அண்ணலார் சேவடிக்கீழ் அமர்ந்தருளினார்.

திருச்சிற்றம்பலம்

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம்

திருச்சிற்றம்பலம்

மலர்மிசை யயனு மாலுங்
காணுதற் கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூ
ராவணப் பழமை காட்டி
உலகுய்ய ஆண்டு கொள்ளப்
பெற்றவர் பாத முன்னித்
தலைமிசை வைத்து வாழுந்
தலைமைநந் தலைமை யாகும்.

திருச்சிற்றம்பலம்

— சேக்கிழார் பெருமான்.

என்றும் உள்ளவராய் எங்கும் நிறைந்தவராய் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவராய் எல்லா அறிவும் எல்லா முதன்மையும் எல்லா அநுக்கிரகமும் உடையவராய் உண்மையறிவானந்த உருவங் கொண்டு

பேரொளிப் பிழம்பாக விளங்கும் சிவபெருமான் ஒரு திருமுகமும் சந்திரன், சூரியன், அக்கினி ஆகிய மூன்று கண்களும், கங்கை, பிறை, கொன்றை சூடிய சடாமுடியும் காளகண்டமும், மான், மழு, அபயம், வரதம்கூடிய நான்கு திருக்கரங்களும், திருநீறு பூசிய திருமேனியும் பிரமன் திருமால் ஆகியோரது என்பு மாலைகளை அணிந்த திருமார்பும், புலித் தோலுடையும் வீரக் கழலும் சிலம்பும் அணிந்த திருவடிகளும் கொண்ட சீகண்ட ருத்திர மூர்த்தியாய் வெள்ளி மயமாகிய திருக்கயிலாய மலையில் பேரொளியுடைய சிங்காதனத்தின் மேல் ஆன்மாக்களுக்கு அநுக்கிரகம் செய்தற் பொருட்டாகத் தமது அருட் சக்தியாகிய பார்வதி தேவியார் இடப்பாகத்திலே திகழ வீற்றிருந் தருளுவார்.

அத்திருமலையின் அடிவாரத்தில் வியாக்கிரபாதமுனிவரது மைந்தரும் சிதம்பரத்தில் சிவபெருமான் அருளிய திருப்பாற் கடலைக் குழந்தைப் பருவத்தில் குடித்த பெருந்தகையாரும் கண்ணபிரான் சென்னியில் திருவடியைச் சூட்டிச் சிவதீட்சை செய்து

வைத்த ஞானசிரியருமாகிய உபமந்யு மகா முனிவர் பல்லாயிரவர்களாகிய முனிவர்கள் சூழ எழுந்தருளியிருந்தார். அப்போது அங்கு ஆயிரங் கதிரவர்களது ஒளி ஒன்று கூடினாற் போன்ற பேரொளியொன்று தோன்றியது சிவபெருமானது திருவடிகளையன்றி மற்றெதையும் வணங்காத திட்பமுடைய உபமந்யு மகாமுனிவர், அவ்வொளி தோன்றிய திசையை நோக்கிக் கைகூப்பித் தொழுது, கீழே விழுந்து வணங்கியெழுந்தார். இதைக்கண்ட முனிவர்கள் அவரை நோக்கி அதற்குரிய காரணம் யாது என வினவினர்.

உபமந்யு மகாமுனிவர் மற்ற முனிவர்களை நோக்கித் தம்பிரானைத் தன்னுள்ளந் தழீஇயவனாகிய நம்பியாரூரன் கயிலையை நோக்கி வருகின்றான். அதனால் இப்பேரொளி தோன்றியது என்று சொல்ல அவர்கள் அவரிடம் அந்நம்பியாரூரது சரித்திரத்தைச் சொல்லியருள வேண்டுமென்று கேட்க, அவர் சொல்லத் தொடங்கினர்; திருக்கயிலாய மலையில் சிவபெருமானுக்குத் திருமாலைகள் தொடுத்தணியும் திருப்பணியையும், திருநீற்றுக் கோயில் ஏந்தி வரும்

திருப்பணியையும் மேற்கொண்டிருந்தவர் ஆலால சுந்தரர். அவர் ஒரு நாள் மலர் கொய்து வரத் திருநந்தன வனத்துக்குச் சென்றார். பார்வதி தேவியாருக்குப் பூக் கொய்து வர அநிந்திதை கமலினி என்னும் பேரழகு வாய்ந்த இரு சேடியர்கள் அந் நந்தன வனத்துக்கு வந்தனர்.

அப்போது உண்மை நாயன்மார்களைப் பற்றி உணர்த்துவதாகிய திருத்தொண்டத் தொகையை வெளிப்படுத்திமாதவஞ்செய்த தென்றிசையை வாழ வைக்கத் திருவுளங் கொண்ட கயிலாயபதி ஆலால சுந்தரரது உள்ளத்தை அம்மங்கையர்பாற் செல்லும் படி செய்தார். அவர்களும் அவரை நாடி நினைந்தார்கள். பூக்கொய்து கொண்டு சென்ற சுந்தரரை இறைவன் பார்த்து மாதர்மேல் மனம் வைத்தனை, தென்புவி மீது தோன்றி அம்மெல்லியலாருடன் காத லின்பம் கலந்து அணைவாய் என்று திருவாய் மலர்ந்தருளினார்.

கேட்ட சுந்தரர் மனங்கலங்கி, ஐயனே! உமது திருவடிகளை விட்டு நீங்கும் சிறுமை யேன் மையல் விளைப்பதாகிய மனிதப்

பிறப்பை எடுத்து மயங்கிநிற்கும் வேளையில் தேவரீர் எழுந்தருளி வந்து அடியேனைத் தடுத்தாட்கொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்க இறைவனும் அதற்கிசைந்தனன்

சைவ சமயாசாரியர் நால்வரில் திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகள் ஆகிய இருவரும், சந்தாநாசாரியர் நால்வரில் மெய்கண்ட சிவம், அருணந்தி சிவம் மறைஞான சம்பந்த சிவம் ஆகிய முதல் மூவரும் திருவவதாரம் செய்தருளிய சிறப்பையுடையது திருமுனைப்பாடி நாடு. பெருநலம் மிகுந்த இந்தத் திருநாட்டில் முப்போதுந் திருமேனி தீண்டும் பேறு பெற்ற ஆதிசைவ வேதியர்கள் மிகுதியாக வாழும் ஊர், திருநாவலூராகும்.

இங்கு மாதொரு பாகராகிய சிவபரம் பொருளுக்கு வழிவழியாக மெய்யடிமை பூண்டு ஒழுகி வருகின்ற சைவ வேதியர் குலத்தில் சடையனார் என்பவர் ஒருவரிருந்தார். அவரது வாழ்க்கைத் துணைவியராயிருந்த இசை ஞானியார்பால் ஆலாலசுந்தரர் உலகம் தீதகன்று உய்யத் திருவவதா

ரம் செய்தருளினர். சிவபெருமான் திருவருளால் அவருக்கு நம்பியாரூரர் என்னும் திருப்பெயர் சூட்டப் பெற்றது. குழந்தையைப் பெற்றோர்கள் பெரிதும் பேணி வளர்த்து வந்தார்கள். நம்பியாரூரர் தெருவில் சிறு தேருருட்டி விளையாடிக்கொண்டிருந்தார்.

நரசிங்கமுனையர் என்னும் அந்நாட்டு மன்னர் குழந்தையைப் பார்த்துக் காதல் மிகுந்து, பெற்றோர்களிடம் சென்று நட்புரிமையினலே வேண்டிப் பெற்று அரண்மனைக்கு அழைத்து வந்து அரசிளங்குமரனையொப்ப மகன்மை முறை பேணி வளர்த்து வந்தார். ஆதி சைவராகத் தோன்றி அரசராக வளர்ந்து வரும் நம்பியாரூரர் அவ்விரண்டு மரபுகளுக்குமுரிய கலைகளையெல்லாம் கசடறக்கற்றுத் திருமணப் பருவத்தை அடைந்தார்.

சடையனர், தமது குலங் கோத்திரங்களுக்கேற்றவராயிருந்த புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியரது திருமகளை நம்பியாரூரருக்குத் திருமணம் பேசி முடித்துக் குறித்தபடி மணமகள் இல்லத்தில் திருமணச் சடங்குகள் தொடங்கப் பெற்றன. சிவாகம விதிப்

படி அங்குரார்ப்பணம் ரட்சாபந்தனம் ஆகிய வற்றைச் செய்தார்கள். நம்பியாரூரர் ஆதி சைவத் திருவும் அரசுத் திருவும் பொலியு மாறு தம்மை அலங்கரித்துக் கொண்டு சிவ பெருமான் திருவடிகளைச் சிந்தித்துத் திருநீ றணிந்து மங்கல வாத்தியங்களும் மறை யொலியும் முழங்க உற்ருரும் உறவினரும் புடைசூழ்ந்துவர நன்குஅலங்கரிக்கப்பெற்ற குதிரையிலேறி மணப்பந்தருக்கு வந்தார்.

அவ்வேளையில் திருக்கயிலாயபதியாகிய சிவபெருமான், அந்தத்திருமணத்திலிருந்து அவரைத் தடுத்தாட் கொண்டு அவரால் உலகம் பெறவேண்டிய நற்பயனைப் பெறும் படி செய்தல் வேண்டுமென்று திருவுளங் கொண்டு, ஒரு கிழ வேதியராகி அந்தத் திரு மணப்பந்தரில் வந்து தோன்றிஞர். நெற்றி யில் வெண்டுகிலை வைத்தாற்போல் இடை வெளியில்லாமல் உத்தூளிக்கப்பெற்ற திரு நீறு விளங்கவும் காதுகளில் உருத்திராக்கக் குழைகள் தாழவும் திருமார்பில் பூணூல் கண்டிகையுடன் திருத்தோளில் வெள்ளை உத்தரீயம் அசையவும் திருக்கரத்தில் குடை திகழவும் வயிறு சரிந்த பஞ்சகச்ச உடை

யுடன் கையில் ஒரு மூங்கில் தடியைப் பற்றிக் கொண்டு பேரழகு மூத்த வடிவம் இதுவோ வென்று யாவரும் வியந்து நோக்க வந்த வேதியர் மணப் பந்தரில் இருந்தவர்களை நோக்கி, நீங்கள் இதனைக் கேட்க வேண்டு மென்று சொல்லி நம்பியாரூரரிடம் உனக்கும் எனக்கும் ஒரு வழக்கு இருக்கிறது அதனை முடித்துக்கொண்ட பிறகே நீ திரு மணம் செய்துகொள்ள வேண்டும் என்று கூறினர்.

நம்பியாரூரர் அங்ஙனம் என்பால் ஓர் வழக்கு உனக்கிருக்குமாயின் அதனை முடித் தல்லது நான் மணம் புரிந்து கொள்ளமாட் டேன். அதனை முழுவதும் சொல்லுக என்று வேதியரிடம் கேட்டார். தேவரையும் மற்றை மூவரையும் தமக்கு அடிமையாகக் கொண்டி ருக்கும சிவபெருமான் நாவலூரன் என் அடியான் என்ருர். இதைக் கேடடவர்களிற் சிலர் இச்சொற்களைப் பொருட்படுத்தாது புறத்திற் சென்ருர்கள். சிலர் வெகுண்டார் கள். சிலர் சிரித்தார்கள் திருநாவலூரர் மறையோன் மொழி நன்று என்று ஏளனஞ் செய்து நகைத்தார். வேதியர் அவரை நோக்கி உன் பாட்டன் எனக்கு எழுதித்

தந்த அடிமையோலை இதோ இருக்கிறது. நீ சிரிப்பது எற்றுக்கு என்றார்.

நாவலூரர் வேதியரைப் பார்த்துக் குற்றமற்ற அந்தணர்கள் வேறொரு அந்தணருக்கு அடிமையாதலை இன்று நீர் சொல்லக் கேட்டோம். நீர் பித்தனோ என்றார். வேதியர் நான் பித்தனாகுக! அல்லது பேயனேயாகுக. நீ எவ்வளவு தீங்குகளைச் சொன்னாலும் நான் நாணமடையமாட்டேன். எதிர் நின்று வித்தகம் பேசவேண்டாம் பணி செய்ய வேண்டும் என்றார். காட்சியாற் காதலையும் வார்த்தையால் கோபத்தையும் உண்டாக்குகிற வேதியரிடம் நாவலூரர் அடிமையோலை யுள்ளதாயின் அதனைக் காட்டுதிர் எனக் கேட்டார். வேதியர் அவ்வோலையைக் காணுந் தகுதி உனக்கேது? அவையோரிடம் காட்டினால் பணிசெய்யுந் தகுதியே உனக்குண்டு என்று என்று சொல்ல, நாவலூரர் சினமடைந்து, ஓலையைப் பறிப்பதற்கு அவரிடம் செல்ல அவர் மணப்பந்தரைச் சுற்றியோட, இவர் அவரைத் தொடர்ந்தோடி ஓலையைப் பறித்து இது என்ன முறை என்று அதனைக் கிழித்து விட்டார்.

வேதங்களனைத்தும் பலவாருக முறை யிட்டும் அறிய முடியாத பெருமான், சபை யோர்கள் முன்னிலையில் நாவலூரர் செய லைக் கூறி முறையிட்டார் சபையோர்கள் அவரைப் பார்த்து உலகத்திலில்லாத முறையை வைத்துக் கொண்டு பிணங்கு கின்ற நீர் எங்குள்ளவர் என்று கேட்டார் கள். வேதியர் இப்பொழுது இங்குள்ளேன். எனது இருப்பிடம் அருகிலிருக்கிற வெண் ணெய் நல்லூரே. அது கிடக்கட்டும். அற வழியை விட்டு வலிமையைக் காட்டி என் கையிலிருந்த ஓலையைப் பறித்துக் கிழித்து இந்நாவலூரன் தனது அடிமையை உறுதிப் படுத்திவிட்டான் என்ருர்.

நாவலூரர் அவரைப் பார்த்து நீர் வெண்ணெய் நல்லூராரெனில் உமது பிழை தெறி வழக்கைப்பேச அங்கே வாரும் என்று அழைத்தார். வேதியர் அதற்கிசைந்து முன்னே செல்ல நாவலூரரும் சுற்றத்தார் களும் அவர் பின்னே சென்றனர். திருவெண் ணெய் நல்லூர்த் திருக்கோயிலின் முன்னே யுள்ள அம்பலத்தில் கூடியிருந்த மறைநீதி வல்ல சான்ருேரிடம் வேதியர் தமது வழக்

கைச் சொன்ஞர். அவர்கள் நாவலூரரை நோக்கி உமது மறுமொழி என்ன என்று கேட்டனர். நாவலூரர் நூலறிவு மிக்கீர்க ளாகிய நீங்கள் என்னை ஆதிசைவனென்று அறிவீர்கள். இவன் என்னைத் தனக்கு அடிமையென்று சாதித்தானேல் அது மனத் திஞல் உணர்தற்கெட்டா மாயையேயாகும் என்று கூறிஞர்.

சபையோர் வேதியரிடம் இவரை உமது அடிமையென்று உறுதி செய்வதற்கு ஆதர வாக, இதுவரை இப்படி நடந்ததொரு நடைமுறையாகிய ஆட்சி, உடன்பாட்டு எழுத்துச் சான்ருகிய ஆவணம், நேரிற் கண்டவர்கள் சொல்லும் சாட்சி ஆகிய மூன்றில் ஒன்று நீர் காட்டுதல் வேண்டு மென, அவர் இவன் முன்னே ஆத்திர மடைந்து கிழித்த ஓலை படியோலை மூல ஓலை யைப் பத்திரமாக இதோ வைத்திருக்கி றேன். இதையும் இவன் பறித்துக் கிழித்து விடாமலிருக்கப் பார்த்துக் கொள்வீர்களா ஞல் காட்டுகிறேனென்று சொல்லி அவர்க ளிடம் அவ்வுறுதியைப் பெற்றுக் கொண்டு மற்ருெரு ஓலையை நீட்டிஞர்.

ஓலையின் பழமையைப் பார்த்து எல்லோரும் வியப்படைந்தனர். கரணத்தான், வேதியரிடமிருந்து ஓலையை வாங்கி எல்லோரும் கேட்க அதிலுள்ள வாசகங்களைப் படித்தான் "திருநாவலூரிலேயுள்ள ஆதிசைவ வேதியனாகிய நாவலூரன் திருவெண்ணெய் நல்லூர்ப் பெருமுனிவராகிய பித்தருக்கு யானும் எனது வழிமுறையில் வரும் மரபினரும் தொண்டு செய்ய இசைந்து உள்ளும் புறமும் ஒத்து இந்த ஓலை எழுதிக் கையெழுத்திட்டுக் கொடுத்திருக்கிறேன்" என அதில் எழுதப்பெற்றிருந்தது. கையொப்பங்கள் சரி பார்த்து ஒப்புக்கொள்ளப் பெற்றன. நான்மறை முனிவருக்கு நம்பியாரூரர் ஏவல் செய்தல் கடன் என்று அம்பலத் தலைவர் தீர்ப்பளித்தார். இறைவன் வழக்கு வென்ற அம்பலமாக அவ்வம்பலம் ஆயிற்று.

வெற்றி பெற்ற வேதியரிடம் அவர் இல்லத்தையும் அவர் கொண்டுள்ள வாழ்க்கையையும் தங்களுக்குக் காட்டும்படி அங்கிருந்தவர்கள் கேட்டார்கள். காட்டுவதாகக் கூறித் திருவருட்டுறையாகிய திருக்கோயிலுக்குள் அவர்களை அழைத்துச் சென்று

மறைந்தருளினுர் வேதியர். திருக்கோயிலுக்குள் சென்ற வேதியரை நம்பியாரூரர் தேடியழைக்க உமா தேவியாரோடு ஆகாயத்தில் இடப வாகனரூடராய்த் தோன்றித் திருக்கயிலாயத்தில் அவர் வேண்டிக்கொண்டபடி தடுத்தாட்கொண்ட உண்மையை அவருக்கு உணர்த்தியருளி "நீ வன்மைகள் பேசியதனுல் வன்றெண்டன் என்னும் பெயரைப் பெற்ருய். நாம் விரும்பும் அர்ச்சனை பாட்டேயாதலால் இனி நீ நிலவுலகில் சொற்றமிழ் பாடுவாயாக" என்று அருளிச் செய்தார்.

நம்பியாரூரர் இறைவனிடம் "உமது குணப் பெருங்கடலை, நாயேன் யாதினை அறிந்து என் சொல்லிப் பாடுவேன்" என்று கேட்க ஆண்டவன், "முன்பு எனைப் பித்தன் என்றே மொழிந்தனை; ஆதலால் என் பெயர் பித்தனென்றே பாடுக" என்று கூறப் "பித்தா பிறைசூடி" என்று தொடங்குந் திருப்பதிகத்தை நம்பியாரூரர் பாடி இறைவனைத் துதித்தார். சடங்கவி சிவாசாரியரது புதல்வி நம்பியாரூரரையே சிந்தனை செய்து சிவலோக வாழ்வை எளிதாகப் பெற்றுக்கொண்டாள்.

நம்பியாரூரர் திருநாவலூருக்கு வந்து பதிகம் பாடித் தொழுது திருத்துறையூர் சென்று "தவநெறி தந்தருள வேண்டும்" என்று பதிகம் பாடிப் பிரார்த்தித்துத் தில்லையைத் தெரிசிக்க எண்ணிப் புறப் பட்டுத் திருவதிகையை வந்தடைந்தார். அந்தத் திருத்தலம் திருநாவுக்கரசு சுவாமி களால் உழவாரப் பணி செய்யப் பெற்றதா தலின் அதனை மிதிக்க அஞ்சி நகர்ப்புறத்தே யுள்ள சித்தவடமடத்தை யடைந்து அங்கே தங்கினார். அன்றிரவு உடன் வந்த பரிசனங் களுடன் வீரட்டானப் பெருமானைச் சிந்தித் துக்கொண்டு அம்மடத்தில் பள்ளியமர்ந்தார் நம்பியாரூரர். வீரட்டானேசுவரர் ஒரு கிழ வேதியர் வடிவங் கொண்டு துயில் அமர்ந் திருந்த நம்பியாரூரரது திருமுடியில் தமது திருவடி மலர்களை வைத்துப் பள்ளி கொள் பவரைப் போலப் பாசாங்கு செய்தார். நம்பி யாரூரர் துயில் விழித்து அவரை நோக்கி "வேதியரே! உமது பாதங்களை எமது முடி யில் வைத்ததென்னை என வினவ இங்ஙனம் திசையறியாதபடி செய்தது எனது மூப்பு என்று வேதியர் சொல்ல நம்பியாரூரர் வேறொரு பக்கத்தில் முடியை வைத்துத்

துயில் கொள்ள முற்பட்டார். மீண்டும் அந்த இடத்திலும் அவரது திருமுடியின் மேல் வேதியர் திருவடிகளை நீட்ட நாவலூரர் "இங்கென்னைப் பலகாலும் மிதித்தனை, நீ யார் என்று கேட்டார். உடனே கங்கையைச் சடையிலே மறைத்த பெருமான் என்னை அறியாயோ என்று சொல்லி மறைந்தான். நாவலூரர், "தம்மானையறியாத சாதியாருளரே" என்னும் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடி வீரட்டானேசுவரரைத் துதித்தார்.

பின்பு நம்பியாரூரர் தில்லைப் பதியை வந்தடைந்தார். புற எல்லையிலேயே அவரை அடியார்கள் எதிர் கொண்டார்கள். திருக்கோயிலுக்குச் சென்று வையகம் பொலிய ஆடுகின்ற மாமன்ற வாணரின் மலர்க் கழல்களை ஒன்றி நின்று வணங்கி அதனால் வந்த பேரின்பத்தில் திளைத்துப் பண்ணுடன் கூடிய பதிகங்கள் பலவற்றைப் பாடியருளினார் நம்பியாரூரர். அப்போது வானத்திலிருந்து "திருவாரூருக்கு நம்மிடம் வருக" என்று அசரீரி வாக்கு எழுந்தது. அது கேட்ட நம்பிகள் அங்கிருந்து புறப்பட்டு

வழியில் திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருவவதாரஞ்செய்து சிவஞான அமுதுண்டு வளர்ந்த சீகாழிப் பதியை அடைந்து "அத் திருத்தலத்தை மிதியேன்" என்று சொல்லி ஊரெல்லைப்புறத்தை வணங்கி வலம் வந்த பொழுது, தோணியப்பர் பெரிய நாச்சியாருடன் இடப வாகனத்தில் தோன்றி அவருக்குக் காட்சி கொடுத்தருளினர். நாவலூரர் மகிழ்ந்து திருப்பதிகம் பாடித் துதித்துத் திருக்கோலக்கா முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருவாரூரை வந்தடைந்தார்.

திருவாரூரில் எழுந்தருளியுள்ள புற்றிடங்கொண்ட பெருமான் அங்கு வாழும் அடியார்களிடம் "காதல் கொண்டு நாமழைக்க நம்பியாரூரன் இந்நகருக்கு வந்து கொண்டிருக்கிறன் அவனை எதிர் கொள்வீர்களாக" என்று அருள் செய்ய அவர்கள் நகரை அலங்கரித்து வைத்து மங்கல வாத்தியங்கள் முழங்க நகர்ப்புறத்துக்கு வந்து நாவலூரரை எதிர்கொண்டார்கள். நம்பியாரூரர் அவர்களை நோக்கி "எந்தையிருப்பதும் ஆரூர் அவர் எம்மையும்

ஆள்வரோ கேளீர்'' என்று பாடித் துதித்துப் பூங்கோயிலை அடைந்து தொழுது வழிபட்டார். அப்போது புற்றிடங் கொண்டார் திருவருளால் "தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம். உன்னைத் தடுத்தாட் கொண்ட திருமணத்தில் நீ கொண்டிருந்த மணக்கோலத்தை என்றுங் கொண்டு வாழ்ந்திருப்பாயாக'' என ஓர் அசரீரி வாக்கெழுந்தது. அன்று முதல் அவரை எல்லோரும் "தம்பிரான் தோழர்'' என்று அழைத்தார்கள்.

திருக்கயிலாயத்தில் பார்வதி தேவியாரது சேடியரில் ஒருத்தியாயிருந்து முன்பு திருநந்தனவனத்தில் ஆலால சுந்தரர்பாற் சிந்தையைச் செலுத்திய கமலினி என்னும் நங்கை திருவாரூரில் உருத்திர கணிகையர் குலத்தில் தோன்றிப் "பரவையார்'' என்னுந் திருப் பெயருடன் மலர் மங்கையைப் போன்ற அழகுடையவளாய், மலைவல்லியின் திருவடிகளில் மாருத பேரன்பு கொண்டவளாய் வளர்ந்து வந்தாள்.

ஒரு நாள் பரவையார் பாங்கியர்களுடன் புற்றிடங்கொண்ட பெருமானை வணங்

கப் பூங்கோயிலுக்கு வந்தார். அப்போது அங்கே வழிபட வந்த நம்பியாரூரர், முன்னைத் தொடர்பு வந்து கூடக் கமலினியாராகிய அவரைக் கண்ணுற்று "இது சிவனருளே" எனத் துணிந்து அவருக்கு மனங் கொடுத்து நின்றார். பரவையாரும் நம்பிகளைக்கண்டு உளங்கொண்டார். இங்ஙனம் ஒருவரை யொருவர் கண்டு காதல் கொண்டு இருவரும் புற்றிடங் கொண்டாரை அடைந்து தமது திருமணத்தை நிறைவேற்றி வைக்க வேண்டுமென்று தனித் தனியே பிரார்த்தித்துக் கொண்டு இருப்பிடங்களுக்குச் சென்றனர்.

கருணைக் கடலாகிய சிவபெருமான் அன்றிரவு அடியார்கள் கனவில் தோன்றி அவர்களிருவருக்கும் திருமண முடித்து வைக்குப்படி அறிவித்து மணமக்களிடத்திலும் அதனை உணர்த்தியருளினார். மறுநாட் காலையில் பரவையாருக்கும் நம்பியாரூரருக்கும் அடியார்கள் முன்னிலையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. சிவயோக நெறியில் திளைத்து மகிழும் நம்பியாரூரர், பரவையாரைத் துணையாகக் கொண்டு அந்த

யோகப் பயிற்சியில் மேலும் அழுந்தி இன்புற்றும், பூங்கோயில் மேய பிரானைப் பொழுது தோறும் சென்று வழிபட்டும் வந்தார்.

ஒருநாள் திருக்கோயிலிலுள்ள தேவாசிரிய மண்டபத்தில் கூடியிருந்த எண்ணில்லாத அடியார்களைப் பார்த்து "இவர்களுக்கு அடியவனாக என்னை ஆக்குகிற நாள் எந்த நாளென்று இறைவன் திருவடிகளில் வேண்ட இறைவன் திருத்தொண்டர்களின் பெருமைகளை அவருக்கு உணர்த்தி அவர்களைப் பாடும்படி திருவாய் மலர்ந்தருளினான். நம்பியாரூரர் அளவில்லாத பெருமையையுடையவர்களாகிய அடியார்களை நான் எவ்வாறு பாடுவேன், பாடும் ஆற்றை அருள வேண்டும் என்று வேண்ட ஆண்டவன் "தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்தான். நம்பியாரூரர் அதனை முதலாக வைத்துக்கொண்டு திருத்தொண்டத் தொகையை ஓதியருளினார்.

குண்டையூர்க் கிழவர் என்னும் வேளாளரொருவர் பரவையாரது திருமாளிகையில்

நாடோறும் நடைபெற்று வந்த சிவனடி யார்கள் திருவமுதுக்குச் செந்நெல்லும் செழும் பருப்பும் முதலியன கொடுத்து வந் தார். ஒரு சமயம் மழை வளஞ் சுருங்கிப் பயிர் வளங் குன்ற அதனால் பரவையார் மாளி கைக்கு நெல்லெடுக்க முடியாது போயிற்று. இதற்கு மிகவும் மனம் வருந்திய குண்டை யூர்க் கிழவர் அன்றிரவு உணவு கொள்ளாது கவலையோடு துயில் கொண்டார். சிவபெரு மான் அவரிடம் வந்து தோன்றி நம்பியாரு ரனுக்காக உம்மிடம் நெல் தந்தோம் என்று சொல்லி அவ்வூரெல்லையளவும் வானம் மறையும்படி நெல் மலைகளை நிறுத்தியருளி னார்.

இரவு புலர்ந்ததும் குண்டையூர்க் கிழவர் அந்நென் மலையைப் பார்த்து அதிசயித்து, அதனைத் திருவாரூரிற் சேர்க்க யாரால் முடி யும் என்று மயங்கி ஓடோடியும் வந்து நம்பி யாரூரரிடம் அதனை விண்ணப்பித்தார் நம்பி கள் திருக்கோளிலித் திருத்தலத்தில் எழுந் தருளியிருக்கும் பெருமானது திருவடிகளைத் தொழுது "நீள நினைந்தடியேன்" என்னுந் தலைப்பையுடைய பதிகத்தைப் பாடிச் சிவ பூதங்களின் உதவியால் அந்நெல் முழுவ

தும் பரவையார் மாளிகைக்கு வரப்பெற்றுக் கொண்டார்.

திருநாட்டியத்தான் குடியில் வாழ்ந்திருந்த கோட்புலியார் ஆளுடைய நம்பிகளைத் தமதூருக்கு வரும்படி வேண்ட நம்பிகள் அங்கே சென்று அவரால் உபசரிக்கப் பெற்று அடிமையாகக் கொண்டருள வேண்டுமென்று அவரளித்த அவரது புதல்வியராகிய சிங்கடி, வனப்பகை ஆகிய இருவரையும் மகண்மை முறையில் ஏற்றுக் கொண்டு அங்கே பாடிய திருப்பதிகத்தின் திருக்கடைக் காப்பில் "சிங்கடியப்பன்" என்று தம்மைக் குறிப்பிட்டருளினூர்.

திருவாரூரில் பங்குனி உத்தரத் திருநாள் தொடங்கியது. திருவிழாவில் பரவையார் திருமாளிகையில் அடியார்களுக்குத் திருவமுது படைக்கப் பொன் வேண்டுமென எண்ணித் திருப்புகலூருக்குச் சென்று திருக்கோயிலை அடைந்து பெருமானைத் தொழுது வணங்கித் தமது மனக்கருத்தை விண்ணப்பித்து விட்டு நம்பியாரூரர் திருக்கோயிலின் முன்றிலில் வந்து தங்கியிருக்க, அப்போது

இறைவன் திருவருளால் அவருக்குத் துயில் வந்தது. அங்கே திருப்பணிக்காக வந்திருந்த சுடுசெங்கற்களை எடுத்துத் தலைக்குயரம் பண்ணிக்கொண்டு சிறிது பொழுது கண்ணயர்ந்தார். துயிலுணர்ந் தெழுந்த பொழுது தலைக்குயரத்திற்காகவைத்திருந்த அத்தனை செங்கற்களும் பொன்கற்களாக மாறியிருந்தன. நம்பியாரூரர் இறைவன் திருவருளை வியந்து "தம்மையே புகழ்ந்து" என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடித் துதித்தார்.

பின்னர் நம்பியாரூரர் திருப்பனையூர் திருவிழி மிழலை முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருவாலம்பொழிலை அடைந்து வழிபட்டு அங்கேயிருக்கும் பொழுது இறைவன் தமது அருட்கோலத்தை அவருக்குக் காட்டி மழபாடிக்கு வர மறந்தாயோ என்று உணர்த்தத் திருமழபாடிக்குச் சென்று 'பொன்னார் மேனியனே' என்னும் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடித் தொழுதார். திருப்பாச்சிலாச்சிராமத்தில் 'வைத்தனன் தனக்கே தலையுமென் நாவும்'

என்னுந் திருப்பதிகம் பாடி இறைவனிடம் நிதிக்குவை பெற்ருர்.

பிறகு பலதலங்களையும் வணங்கிக் கொண்டு கொங்கு நாட்டிலுள்ள திருப் பாண்டிக் கொடுமுடியை அடைந்து பெரு மானை வணங்கி "மற்றுப் பற்றெனக்கு" என்னுந் தலைப்பையுடைய நமச்சிவாயத் திருப்பதிகத்தை அங்கே ஓதியருளித் திரு முதுகுன்றம் செல்ல வழிக் கொண்டார். அப் போது சிவபெருமான் அவர் முன்னே ஒரு வேதியராகிவந்து கூடலையாற்றூருக்கு இது வழி என்றுகாட்ட அத்தலத்துக்குச் சென்று வணங்கிக் கொண்டு திருமுதுகுன்றத்தை அடைந்தார்.

திருக்கோயிலுக்குச்சென்று இறைவனைத் தொழுது பாடித்துதித்துத் தமக்குப்பொருள் வேண்டுமென்று தம்பிரான் தோழர் முது குன்றத்தீசரிடம் விண்ணப்பிக்க, அவர் பன் னிரண்டாயிரம் பொன் வழங்கியருளினுர். நம்பிகள் அப்பொன் முழுவதையும் திருவா ரூரில் வரும்படி அருள்புரிய வேண்டுமென்று இறைவனிடம் வேண்டப் "பொன்னை மணி

முத்தாற்றிலிட்டுத் திருவாரூர்க் குளத்தில் எடுத்துக் கொள்க'' என்று அசரீரி வாக்கெழுந்தது. அதன்படி மச்சம் வெட்டி வைத்துக்கொண்டு பொன்னை ஆற்றிலிட்டார் நம்பியாரூரர்.

பின்பு திருத்தில்லை முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருவாரூர் சேர்ந்த நம்பியாரூரர் மணிமுத்தாற்றிலிட்ட பொன்னைக் கமலாலயக் குளத்தில் எடுத்து வருவதற்குப் பரவையாரை உடன் வரும்படி அழைத்தார். பரவையார் சிறு முறுவல் செய்து இது என்ன அதிசயம் என்று உடன் வரக் கமலாலயத்தின் வடகீழ்த்திசையை அடைந்து பரவையாரைக் கரையில் நிறுத்தி விட்டு நீரில் இறங்கித் தடவினார் நம்பிகள். அவர் பாட்டில் விருப்பம் வைத்த இறைவன் பொன்னை வருவியாது அருள அப்போது "பொன் செய்த மேனியினீர்'' என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தை வன்றொண்டப் பெருந்தகையார்பாடி வேண்டத் திருவருள் பொன் முழுவதையும் வரக் கொடுத்தது. பெற்ற பொன்னை உரைத்து மச்சத்துடன் ஒப்பிட்டுப் பார்க்க உரை

தாழ்ந்தது கண்டு மீண்டும் பதிகம்பாடி ஒத்தமச்சமுடையதாக ஆக்கிக் கொண்டார்

தம்பிரான் தோழர் திருநள்ளாறு முதலிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டு திருக்குருகாவூருக்கு வரும்பொழுது நீர் வேட்கையினாலும் பசியினாலும் களைப்புறச் சிவபெருமான் வழியில் ஒரு பந்தரை உண்டாக்கித் தண்ணீருடனும் பொதி சோறுடனும் அதில் தங்கியிருந்தார். தம்பிரான் தோழர் அங்குவந்ததும் அவரை அழைத்துப் பொதிசோறும் தண்ணீரும் தருகின்றேன். உண்டு குடித்து இளைப்புத் தீர்வீராக எனக் கொடுக்க அவர் அவற்றை வாங்கித் திருவமுது செய்தார். அவருடன் வந்த எண்ணில்லாத பரிசனங்களுக்கும் பசிதீர அந்தப் பொதிசோறு பொலிந்து பெருகியது. பெருமான் பந்தருடன் மறைந்தருளினார். நம்பியாரூரர் திருவருளை வியந்து பதிகம்பாடினார். திருக்கச்சூரில் வழிபாடு முடித்துக் கொண்டு திருக்கோயிலிலிருந்து அவர் வெளி வரும் போது திருவமுது கொள்ளும் வேளை வந்தது. பரிசனங்கள் வந்து சேரவில்லை. சிவபெருமான் ஓர் அந்தண வடிவங் கொண்டு

வந்து அவ்வூரிலிருந்த மறையவர் இல்லங்களில் பிச்சை ஏற்றிரந்து சோறு கொண்டு வந்து நம்பியாரூரரை உண்பித்து மறைந்தருளினூர்.

தொண்டை நாட்டிலுள்ள காஞ்சீபுரம் திருக்காளத்தி முதலிய திருத்தலங்களை வணங்கித் திருப்பதிகங்கள் பாடித் துதித்து நம்பியாரூரர் திருவொற்றியூர் வந்தடைந்தார். அவ்வூர் வாசிகள் அவரைப் பூரண கும்பம் முதலிய சிறப்புக்களுடன் வரவேற்கத் திருக்கோயிலுக்குச் சென்று எழுத்தறியும் பெருமானைத் தமிழ் பாடி வழிபட்டுக் கொண்டு அங்கே சில நாட்கள் தங்கியிருந்தார்.

ஞாயிறு என்னும் ஊரில் வேளாள குலத்தில் மேலானவராக விளங்கிய ஞாயிறு கிழாரென்பவர் செய்த நற்றவத்தின் பயனுகத் திருக்கயிலையை விட்டு நீங்கிய அநிந்திதையார் அவரது திருமகளாராக அவதரித்துச் சங்கிலியார் என்னுந் திருப்பெயருடன் வளர்ந்து மலை மடந்தை மலர்ப் பாதங்களை மறவாத உணர்வுடன் மணப் பருவத்தை அடைந்திருந்தார். பெற்றோர்கள் அவரது திருமணத்தைப் பற்றிப் பேசிக்கொண்டி

ருந்தபொழுது அவர் அவர்களை நோக்கி நீங்கள் என் திருமணத்தைப் பற்றிப் பேச வேண்டாம் "ஈசன் திருவருளே மேய ஒருவர்க்கு உரியது யான்" "திருவொற்றியூர் சென்று இனி நான் சிவனுர் திருவருளிற் செல்வேன்" என்று கூறினர்.

சங்கிலியாரின் தகுதியறியாத அவர் குலத்தவனொருவன் அவரைமகட்பேசிவரச் சில முதியவர்களை அனுப்பினன். சங்கிலியாரின் தந்தையார் மணம்பேசவந்த அவர்களிடம் சொல்லத்தக்கனவற்றைச் சொல்லியனுப்பினர். அவர்கள் திரும்பிச் செல்லுவதற்கு முன்னே மகட் பேச அனுப்பியவன் உலக வாழ்வை நீத்துவிடச் சங்கிலியாரின் பெற்ருேர்கள் அச்சங்கொண்டு அவரைத் திருவொற்றியூருக்கு அழைத்து வந்து கன்னி மாடத்தில் தங்கித் தவஞ்செய்து ஒழுகத் துணை செய்தார்கள். திருவொற்றியூரில் சங்கிலியார் முன்பு திருக்கயிலையிற் செய்து வந்த திருமாலைகள் தொடுத்துச் சாத்துந் திருப்பணியை மேற்கொண்டு காலந்தோறும் திருக்கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்து வருவாராயினர்.

ஒரு நாள் திருக்கோயிலுக்கு வழி பாட்டுக்கு வந்த நம்பியாரூரர், அங்கே பெருமானுக்குத் திருமாலைகளைச் சாத்தக் கொடுத்துத் திரும்பிய சங்கிலியாரைக் கண் ணுற்று அவர்பால் விருப்பங்கொண்டு, "இப் பிறவி எனக்கு வரக் காரணமாயிருந்த இரு வரில் பரவை ஒருத்தி. இவள் மற்றைய வளோ" என மனமருண்டு ஒற்றி நாயகரி டம் சென்று ஒரு மங்கையைப் பாகத்தில் வைத்து மகிழ்ந்து மற்ளுெரு மங்கையைச் சென்னியில் வைத்துக் காதலிக்கும் பெரு மானே! இங்கே உமக்குத் திருமாலை தொடுத்துச் சாத்தும் சங்கிலியை எனக்குத் தந்து என் வருத்தத்தைத் தீர்த்தருள வேண்டுமென வேண்டிஞர்.

அன்றிரவு எழுத்தறியும் பெருமான் சங் கிலியாரின் கனவில் தோன்றி நம்பியாரூ ரரை மணத்தால் அணைந்து கொள்ளும்படி அறிவிக்கச் சங்கிலியார் இறைவனிடம் "நம்பியாரூரர் முன்பு பரவையாரை மணந்த வர்" என்பதைக் குறிப்பால் வெளிப்படுத்தி ஞர். சிவபெருமான் சங்கிலியாரிடம் அவன் உன்னைப் பிரிந்துசெல்லாமைக்கு ஒரு சபதம்

பெற்றுக்கொண்டு மணம் புரிந்து கொள் என்று சொல்லிவிட்டு நம்பியாரூரரிடம் வந்து சபதம் செய்து கொடுத்துச் சங்கிலி யாரை மணந்துகொள்ளலாமென அறிவித் தார். தம்பிரான் தோழர் தல யாத்திரை செய்துகொண்டு வரும் தமக்கு இச்சபதம் தடையாயிருக்கும் என்னுங் குறிப்பையுட் கொண்டு இறைவனிடம் சபத வேளையில் கோயிலை விட்டுப் பக்கத்திலிருக்கிற மகிழ மரத்தினடியிற் போயிருக்கவேண்டுமென்று பிரார்த்தித்து இசைவு பெற்று விடியலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். சிவபெரு மான் மீளவும் சங்கிலியாரிடம் சென்று "மகிழடியிற் சபதம் பெற்றுக்கொள்க" என்று கூறியருளினார்.

திருப்பள்ளியெழுச்சி வேளையில் "மூவாததிருமகிழை முக்காலும் வலம்வந்து மேவாது இங்கு யானகலேன்" என்று தாவாதபெருந்தவத்துச் சங்கிலியார் காண நம்பியாரூரர் சபதம் செய்து கொடுத்தார். ஒற்றிநாயகர் திருவொற்றியூர் வாசிகளுக்கு உணர்த்திச் சங்கிலியார்-சுந்தரர் திருமணம் நிகழ அருள் செய்தார். பசுபதியின் திரு

வருளைச் சங்கிலியார் வழியாக அனுபவித்துக்கொண்டு சில நாட்கள் திருவொற்றியூரில் தங்கியிருந்தார் நம்பியாரூரர்.

தென்றற் காற்று வீசத் தொடங்கியது. தியாகேசரின் வசந்தத் திருநாளை நினைந்தார் நம்பியாரூரர். "எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என்னூருர் இறைவனையே" என்னும் சொற்றெடரையுடைய "பத்திமையும் அடிமையையும் கைவிடுவான்" என்னும் பதிகத்தைப் பாடிக்கொண்டு திருவொற்றியூர்த் திருக்கேயிாலுக்குச் சென்று தொழுது திருவாரூரை நோக்கிப் புறப்பட்டார். சபதம் தவறியதால் இரண்டு கண்களும் மறைந்தன உடனிருந்தார் துணை செய்யத் திருவெண்பாக்கத்தை அடைந்து இறைவனைக் "கோயிலுளீரே" எனக் கேட்க ஊன்றுகோல் ஒன்றைக் கொடுத்து "உளோம் போகீர்" என்று வழியனுப்பினன் இறைவன்.

காஞ்சிபுரத்துக்கு வந்து கச்சி ஏகம்பனை வணங்கிக் கண்ணளிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, மங்கை தழுவக் குழைந்த கச்சி நாயகர் மறைந்த இடக் கண்ணைக்

கொடுத்தார் அங்கிருந்து திருவாரூர் வந்து சேர்ந்த நம்பியாரூரர் மற்றைக் கண்ணையும் தந்தருள வேண்டி "மீளா அடிமை" என்னும் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடித் துதிக்கப் புற்றிடங் கொண்ட பெருமான் வலக் கண்ணையும் வழங்கியருளினர்.

தம்மைப் பிரிந்து சங்கிலியாரை மணந்து தம்பிரான் தோழர் வாழுகின்ற செய்தியை யறிந்த பரவையார் பெருந் துன்பத்தால் வாடிக் கொண்டிருந்தார். இவ்வேளையில் அவரது வருகையைப் பரிசனங்கள் பரவையாரிடம் சொல்லச் சென்று, அங்கேயிருந்த நிலை அவர்களை உட்செல்லவொட்டாது தடுத்தமையால் மீண்டும் நம்பியாரூரரிடம் வந்து பரவையாரின் புலவி வன்மையை அறிவித்தார்கள்

நம்பியாரூரர் திருக்கோயிலையடைந்து பரவையார் புலவியைத் தீர்த்தருள வேண்டுமென்று விண்ணப்பிக்கத் தியாகேசப் பெருமான் அர்ச்சகர் வடிவங்கொண்டு பரவையார் மாளிகைக்கு வந்து நம்பியாரூரரை மீண்டும் ஏற்றுக்கொள்ளுமாறு உரைத்தார். அதற்குப் பரவையார் இசைந்தாரில்லை.

இதனை நம்பியாரூரரிடம் பெருமான் சென்று சொல்ல அவர் "உம்மால் முடியாதது ஒன்று உளதோ? மீண்டும்சென்று அவள் ஊடலைத் தீர்த்து என்னை அவளிடம் சேர்க்காது போனீராயின் உயிரை விடுவேன்" என்று வருத்தத்துடன் தெரிவித்தார். பெருமான் மறுமுறை தாமாந்தன்மை அறிவுறுகோலத்தோடு பரவையார் முன்னே தோன்றி நம்பியாரூரரை ஏற்றுக் கொள்ளும்படி சொல்லி இசைவு பெற்றுக்கொண்டு அவரிடம் அதனைக் கூறி இருவரையும் கூட்டி வைத்தார்.

நம்பியாரூரர் நள்ளிரவில் இறைவனை இரண்டு முறை நடக்கவிட்டுத் தூது கொண்ட செய்தியைத் திருப்பெருமங்கலத்திலிருந்த ஏயர்கோன் கலிக்காமர் என்பவர் கேட்டு அவர்பால் செற்றங் கொண்டிருந்தார். அச்செற்றத்தை நீக்கி இருவரையும் தோழமைப் படுத்த எண்ணிய இறைவன் கலிக்காமருக்கு ஒரு கொடிய சூலையை உண்டாக்கி அது நம்பியாரூரராலன்றித் தீராது என்று அவருக்கு உணர்த்தி, அச்சூலை நோயை அவர்பாற் சென்று தீர்த்து

வைக்குமாறு சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் உணர்த்தினூர்.

இறைவன் கட்டளைப்படி நம்பியாரூரர் திருப்பெருமங்கலத்துக்கு வர, அவர் வருகையைக் கேள்வியுற்ற கலிக்காமர் "எம்பிரானைத் தூது கொண்டவன் வந்து இச் சூலையைத் தீர்த்து வைப்பதற்கு முன்பு நானே இதனைத் தீர்த்துக்கொள்வேன் என்று கூறிக் கத்தியால் வயிற்றைக் கிழித்துச் சூலையோடு உயிரையும் போக்கிக்கொண்டார். இந்த வேளையில் நம்பியாரூரர் அங்கு வரக் கலிக்காமரது மனைவியார் கணவனிறந்த துன்பத்தை மறைத்து முகமலர்ச்சியுடன் அவரை வரவேற்றூர். நம்பியாரூரர் கலிக்காமரைப் பார்த்து அவரது நோயை நீக்குதல் வேண்டுமென்று அம்மையாரிடம் சொல்ல அவர் உள்ளே பள்ளி கொள்கின்றூரென்று அம்மையார் கூறினூர்கள். நம்பியாரூரர் உள்ளே சென்று குருதிசோர ஆவி பிரிந்து கிடந்த கலிக்காமரைப் பார்த்து வருந்தி "யானும் இவருடன் சேர்வேன்" என்று உடைவாளைப் பற்றினூர். உடனே கலிக்காமர் இறைவன் திருவருளால் உயிர்

பெற்றெழுந்து நம்பியாரூரர் கையைப் பற்றிக்கொள்ள இருவரும் நட்புப்பூண்டு இன்புற்றுர்கள்.

சேர நாட்டை யாண்டு வந்த கழறிற் றறிவார் சிவபூசைச் சிறப்பால் மேலோங்கி யவர். நாடோறும் பூசைமுடிவில் ஆடற் பெருமானின் சிலம்பொலிகேட்டு மகிழுவது அவர் வழக்கம் ஒருநாட் பூசையில் அவ் வொலி காலந்தாழ்த்துக்கேட்டது. அதற் கென்ன காரணமென்று ஆண்டவனிடம் கேட்டார். எல்லா இடங்களிலும் நிறைந்து விளங்குகின்ற இறைவன் நம்பியாரூரரைக் கழறிற்றறிவாருக்கு நினைவூட்ட வேண்டு மென்னுங் கருத்துடன் "பொன்னம்பலத் திற்கு வந்து வணங்கி வன்றெண்டன் பதிகம்பாடுவதைக் கேட்டுக் கொண்டிருந்த தால் இங்கு வரத் தாழ்த்தோமென்றுர். நம்பியாரூரரை அடைந்து நட்புப்பெறக் கழறிற்றறிவார் விரும்பினர்.

தில்லைக்கு வந்து கூத்தாட வல்ல பெரு மானைக் கும்பிட்டு மகிழ்ந்து, நம்பியாரூரர் திருவாரூர் சென்ற செய்தியை அறிந்து அங்கேவந்தார். நம்பியாரூரரும் கழறிற்றறி

வாரும் ஒருவரையொருவர் விரும்பி நட்புப் பூண்டு அங்கே தங்கி வழிபாடு செய்து வந்தார்கள். பிறகு இருவரும் சோழநாட்டிலும் பாண்டி நாட்டிலும் பல தலங்களை வணங்கிக்கொண்டு திருவாரூர் வந்து திருவையாற்றைவழிபட வழிக்கொண்டனர். காவிரியாற்றில் வெள்ளம் கரை புரண்டோடியது. நம்பியாரூரர் பதிகம் பாடி ஆற்றுவெள்ளத்தை அணை போல நிலைநிறுத்தி வைக்க அனைவரும் ஆற்றை நடந்துகடந்துசென்று ஐயாற்றுப் பெருமானை வழிப்பட்டார்கள்.

கழறிற்றறிவார் நம்பியாரூரரை அழைத்துக் கொண்டு தமது தலைநகரமாகிய திருவஞ்சைக் களத்துக்கு வந்து சில நாட்கள் இருக்கச் செய்து பிறகு திருவாரூர் செல்ல அவர் விரும்பியதால் ஏராளமாகப் பொன்னும், மணியும் பூந்துகிலும் முதலானவற்றைப் பொதி வினைஞரிடம் ஏற்றியனுப்பி அவருக்கு விடை கொடுத்தார். விலை மதிப்பு மிக்க பொருள்களுடன் நம்பியாரூரர் திருமுருகன் பூண்டிக்கருகில் வரும்பொழுது சிவபெருமான் தமது பூதகணங்களை வேடர்களாக அனுப்பி அவற்றைக் கவர்ந்து வரும்

படி செய்தார். தம்பிரான் தோழர் "கொடுகு வெஞ்சிலை" என்னுந் தலைப்பையுடைய திருப்பதிகத்தை அங்கே பாடி வேடர் கவர்ந்த பொருளனைத்தையும் மீட்டுக் கொண்டு, திருவாரூரை அடைந்தார்.

மீண்டும் கழறிற்றறிவாரைக் காணும் விருப்பம் நம்பியாரூரருக்கெழத் திருவாரூரை விட்டுப் புறப்பட்டுத் திருப்புக்கொளியூர் வந்து சேர்ந்தார். அங்கே மறையவர் வீதியில் ஒரு மனையில் மங்கலவொலியும் அதற்கெதிர் மனையில் அழுகையொலியும் கேட்டன. நம்பியாரூரர் இதுபற்றி உடனிருந்தாரை வினவ அவர்கள் "இரண்டு பிள்ளைகள் குளத்திற்கு நீராடச் சென்றனர் ஒரு குழந்தையை முதலை விழுங்கி விட்டது. பிழைத்து வந்த பிள்ளைக்கு இன்று உபநயனம் நடக்கிறது என்று கூறினர்கள். அப்போது அங்கே வந்த முதலையுண்ட பிள்ளையின் பெற்றோர்களிடம் முதலைவாய்ப்பிள்ளையை அழைத்துத் தந்த பிறகே அவிநாசியப்பரைத் தொழச் செல்லுவேன் என்று நம்பியாரூரர் சொல்லி 'உரைப்பாருரை' என்னும் தலைப்பையுடைய திருப்பதிகத்தைப் பாடிக்

குளத்திலிருந்து முதலையையும் அதன் வாயி லிருந்து குழந்தையையும் வரவழைத்துக் கொடுத்தார். பார்த்த அனைவரும் பெரு வியப்படைந்தனர்.

நம்பியாரூரர் திருவஞ்சைக் களத்தை யடைந்து கழறிற்றறிவாரோடு கூடி அளவ ளாவி மகிழ்ந்திருக்கும் நாளில் திருக்கயிலா யஞ் சென்று சேரும் நினைவுவர இவ்வுலகி னிற் பாசம் அடுத்த வாழ்க்கையை அறுத் திட வேண்டும் என்று இறைவனைப் பாடி னார். திருக்கயிலாயபதி, திருமால் பிரமன் முதலிய தேவர்களை நோக்கி "நமது நம்பி யாரூரனை வெள்ளானையின் மேல் ஏற்றிக் கொண்டு இங்கேவாருங்கள் என்றுசொல்ல அவர்கள் அவ்வாறே திருவஞ்சைக் களத் துக்கு வந்து இறைவனது அருளாணையைக் கூறித் தம்பிரான் தோழரைப் பஞ்ச துந்துபி கள் முழங்க வெள்ளானையின் மேல் ஏற்றி அழைத்துச் சென்றார்கள் அப்போது தம்பிரான் தோழர் தமது நண்பராகிய கழறிற்றறிவாரை நினைத்தார். யானையிவர்ந்து செல்லும் நம்பியாரூரது செயலையறிந்த சேரர் பெருந்தகை ஒரு

குதிரையின் காதில் திருவைந்தெழுத்தை ஓதி அதன் மேல் ஏறி வந்து முன் சென்று கொண்டிருக்கின்ற நம்பியாரூரரை வலம் வந்து அவருக்கு முன்னுகச் சென்ருர். சேர மன்னரின் படைவீரர்கள் வீரயாக்கையைக் கொண்டு இவர்களிருவரையும் வலம் வந்து முன் சென்றனர்.

யானேமேற் சென்ற நம்பியாரூரர் "தானெனே முன் படைத்தான்" என்ற திருப் பதிகத்தைப் பாடி அதனே நிலவுலகத்திற் சேர்க்கும்படி வருணனிடம் கொடுக்கஅவன் அவ்வாறே செய்தான். கயிலாயபதி நம்பி யாரூரரை மகிழ்ச்சியுடன் வரவேற்று மகிழ்ந் தருளினுர். நம்பியாரூரரது விண்ணப்பத் தின்படி சேரர் காவலரையும் அவரது திரு வுலாத் தமிழையும் கயிலாயபதி ஏற்றுக் கொண்டார். பரவையார் சங்கிலியராகிய இருவரும் முன்னேய கமலினி அநிந்திதை யாராகிப் பெருவாழ்வு பெற்ருர்கள்

திருச்சிற்றம்பலம்

# மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம்

திருச்சிற்றம்பலம்

எழுதரு மறைகள் தேறா
இறைவனை எல்லிற் கங்குல்
பொழுதறு காலத் தென்றும்
பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத்
துளும்புகண் ணீருள் மூழ்கி
அழுதடி அடைந்த அன்பன்
அடியவர்க் கடிமை செய்வாம்

திருச்சிற்றம்பலம்

— பரஞ்சோதி முனிவர்.

அகிலாண்ட கோடியீன்ற அன்னை யாகிய உமாதேவியும் கருணைக் கடலாகிய சிவபெருமானும், அமரர்த் தாங்கும் குமர

வேளுமாகிய கடவுளர் மூவரும் தங்கியிருந்து அரசு புரிந்த தனிச் சிறப்புடைய தென் பாண்டித் திருநாட்டில், உயிர்களின் உய்தி யில் திருவுளங் கொண்டு சொக்கேசப் பெரு மான் அறுபத்து நான்கு அருள் விளையாடல் கள் புரிந்த மதுரையம்பதிக்குக் கிழக்கே வளம்மிகுந்து விளங்குவது திருவாதவூர்.

இத்திருத்தலத்தில் அந்தணர் குலத்து ஆமாத்தியர் மரபில் சிவாகம நெறி சிறந்து விளங்கவும், பௌத்த மதமாகிய இருள் நெறி உடைந்தோடவும் சிவபெருமானது திருவருளினல் இளஞ் சூரியனைப் போலத் திருவாதவூரர் திருவவதாரம் செய்தார். இவர் உரிய காலத்தில் வித்தியாரம்பம் செய்விக்கப் பெற்றுப் பதினறு வயது நிரம் பும் போது, அறுபத்து நான்கு கலைகளையும் கசடறக் கற்று, அவற்றில் பெரும் புலமை யுடையவராக விளங்கினர். இவரது புலமை நலத்தையும் ஏனைய சிறப்பியல்புகளையும் அந்நாளில் அந்நாட்டையாண்ட அரிமர்த் தன பாண்டியன் கேட்டு இவரை அரண் மனைக்கு வரவழைத்துச் சிறப்புக்கள் பல

செய்து தனது முதலமைச்சராக அமர்த்திக் கொண்டான்.

வாதவூரர், அரிமர்த்தன பாண்டியனுக்கு அமைச்சராகி, எல்லா உயிர்களும் இன்புற்று மகிழும்படி முறை புரிந்து வந்தாராயினும், ஆக்கக் கேடுகளின்றிச் சுட்டறிவிற் கெட்டாது நிற்கும் உண்மைப் பொருளையறியும் அறிவும், ஆக்கக் கேடுகள் உடையதாய்ச் சுட்டறிவிற் கெட்டி நிற்கும் நிலையற்ற பொருளையறியும் அறிவும் தலைப்பட்டமையால், பௌத்தம் முதலிய புறப்புறச் சமயங்களும் மற்றைப் புறம், அகப்புறம், அகச் சமயங்களும் மனமாசகற்றித் தெளிவினை உதவமாட்டா என்பதை உணர்ந்து, சைவ சித்தாந்த நெறிமுறையில் ஆணவக்கட்டை அவிழ்த்துத் தலைவனையும் தன்னையும் வழங்குகின்ற குருபரன் எப்பொழுது வருவான் என்ற ஏக்கம் உடையவராய் அந்த நற்பொழுதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

இப்படியிருக்கும் நாளில் ஒரு நாள் அரசாங்கத்துக் குதிரைக் காவலாளர் சிலர் அரசனிடம் வந்து, அடிபணிந்து "வெற்றி மிக்க வேல் வேந்தே! இப்போது நமது குதிரை லாயத்தில் காலகதிப்பட்டு இறந்தொழிந்தவை போக எஞ்சியிருக்கும் குதிரைகள் ஆண்டு முதிர்ந்தவையும் நோயுடையவையுமாகவே இருக்கின்றன" என்று விண்ணப்பம் செய்தார்கள். அது கேட்ட பாண்டியன் வாதவூரரை நோக்கி, "நீர் நமது பண்டாரத்தைத் திறந்து பெரும் பொருளை எடுத்துக் கொண்டு துறை முகத்தில் வந்திறங்குங் குதிரைகளில் நல்லனவற்றைப் பார்த்து வாங்கி வாரும்" என்று அனுப்பினான்.

அரசனது கட்டளைப்படி வாதவூரர் பெரும் பொருட் சுமையை ஒட்டகங்களில் ஏற்றிக்கொண்டு அவனிடம் விடைபெற்றுத் திருவாலவாயுடையார் திருக்கோயிலை அடைந்து சித்தி விநாயகப் பெருமானையும் மீனாட்சியம்மையாரையும் வணங்கிச் சொக்கேசப் பெருமான் திருமுன்னர்த் தாழ்ந்தெழுந்து, வெள்ளி மன்றை வேண்டியாடிய

பெருமானே! உம்மிடத்து நான் வேண்டுவது ஒன்று உண்டு. அது இந்தப் பொருளையெல்லாம் உமக்கும் உமது மெய்யடியார்களுக்கும் ஆகும்படி செய்வது'' என்று வேண்டினர் அப்போது ஆதிசைவராகிய அருச்சகரொருவர் அவர் முன்னே வந்து விபூதி வழங்கினர். வாதவூரர் நன்னெறிக் கேதுவாகிய நிமித்தம் இதுவென்று மகிழ்ந்து இரண்டு கைகளினாலும் திருநீற்றை யேற்று அணிந்து கொண்டு சொக்கேசப் பெருமானை வணங்கி விடைபெற்றுச் சிவிகையேறிப் புறப்பட்டார்.

வாதவூரருக்கு நிகழ்ந்துள்ள இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆகியவற்றைத் திருவுளங்கொண்ட சிவபெருமான் அவரை அடிமை கொண்டு, பணிகொள்ள நினைந்து ஒரு ஆதி சைவ குல ஆசாரிய வடிவந் தாங்கி மாணுக்கர் பலர் புடைசூழத் திருப்பெருந்துறையிலுள்ள ஒரு குருந்த மரத்தினடியில் எழுந்தருளியிருந்தார்.

வாதவூரர் கீழ்கடல் துறையை நோக்கி வரும் வழியில் திருப்பெருந்துறையை

நெருங்கியதும் அவரது உள்ளத்தில் உவகை வெள்ளம் பெருக்கெடுத்து ஓடக் கண்களில் ஆனந்த நீர் பெருக உச்சியிற் குவித்த கைகளோடு சிவிகையிலிருந்து கீழி றங்கி நடக்கத் தொடங்கினர். நெருப்பி லிட்ட வெண்ணெயைப்போல எனது நெஞ் சம் உருகும்படி இங்கே நிகழ்வதனல் இந்த இடமே எனது மல ஆற்றலைக்கெடுத்து ஆட் கொள்ளுகின்ற கருணைக் கடல் இருக்கும் இடமாகும் என்று எண்ணி உள்ளே புகுந்து ஆசாரியர் எழுந்தருளியிருக்கும் குருந்த மரத்தைக் கண்டார். வேதங்கள் ஒரு பக்கத் திலும் மெய்வழிச் சைவ ஆகமங்கள் மற் றொரு பக்கத்திலும், புராணங்கள் இன்னொரு பக்கத்திலுமாக அங்கே முழங்கிக் கொண் டிருந்தன. சரியை வல்ல மெய்த் தொண்டர் களும், கிரியை செய்யும் நன்மைந்தர்களும், சிவயோகந் தெரியும் சாதகர்களும், தேசிகம் புரியும் போதகர்களுமாக அளவில்லாதவர் கள் அங்கே வீற்றிருந்தார்கள்.

மெய்த் தொண்டர்கள் பலர் கூடி இருந்து இன்புறுகின்ற இந்தக் கூட்டத்தி னிடையில் யோகாசனத்தை மேற்கொண்டு

வலது கையிற் சின் முத்திரையும், இடது கையில் சிவஞான போதச் சுவடியும் உடையவராய் எழுந்தருளியிருந்த குரு மூர்த்தியை வாதவூரர் கண்களிப்பக் கண்டு, கீழே விழுந்து வணங்கி நின்ருர். அவரது தீவிரதர சத்திநிபாத நிலையைத் திருவுளங் கொண்ட ஆசாரிய மூர்த்தி அவரது மும் மலங்களையும் நயன தீட்சையால் கழித்து, அவரது திருமுடியின் மேல் திருவடிகளைச் சூட்டித் திருக்கரங்களை வைத்து, முத்தி பஞ்சாக்ஷரத்தை உபதேசித்து அவரைச் சிவ சொரூபமாக ஆக்கினுர். உடனே திருவாதவூரர் தேனும், பாலும், தீங்கரும் பும், அமுதுமாய்த் தித்தித்து, ஊனும் உள்ளமும் உருக, உள்ளொளி உணர்ந்து இன்ப வாரிதியில் திளைத்தார். ஞானவாணி அவரது நாவில் வந்து குடி கொண்டாள். பழுதில்லாத சொல் மணிகளைப் பத்தி செய்து, அன்பு வடத்திஞல் முறையாகத் தொடுத்துப் பாமாலேகளை அழுது அழுது சாத்துகின்ற மெய்யன்பருக்கு "மாணிக்க வாசகர்" என்ற சிறப்புப் பெயரை ஆசாரிய மூர்த்தி வழங்கியருளினுர்

மாணிக்கவாசக சுவாமிகள் குருமூர்த்தியினது திருவடிகளில் கண்ணீரைத் திருமஞ்சனமாக ஆட்டிச் சொல்மலர்களை அணிந்து சிவபோதமாகிய இன்னமுதத்தை ஊட்டிப் பரஞானமாகிய சிவாக்கினியை மூட்டி இடைவிடாத ஞானபூசை செய்து வருவாராயினர். அவரது தித்திக்கின்ற மணிவார்த்தையைத் திருச்செவிகளில் ஏற்று அருந்தவும் அவர் கொண்டுவந்த பொருளை எல்லாம் தமக்காக்கிப் பணிகொள்ளவும் பாண்டிய மன்னனுக்கு மேல் நிலையையுணர்த்தி அவனை நெறியிற் செல்ல விடவும், புத்தர்களை வாதில் வென்று முடிக்கவும் திருவுள்ளங் கொண்ட சிவபெருமான் அவரை இங்கே சின்னாட்கள் இருப்பாயாக! என்று கூறி இருத்திவிட்டு உடன்வந்த அடியார்களோடு மறைந்தருளினர். கனவுக் காட்சியைப் போல நினைவரிய திருமேனியைக் காட்டி இறைவன் மறைந்ததை எண்ணி வருந்திய வாதவூரடிகள் வறியவனாகிய ஒரு பிறவிக் குருடன் கையில் எதிர்பாராத நிலையில் வந்து கிடைத்த பெருவிலை மதிப்பையுடைய இரத்தினத்தைப் போலவும் மழலை தெளியாத ஒரு குழந்தையின் கைப்பட்ட பொன்

வள்ளத்தைப் போலவும், யார்க்கும் அறிவரியானாகிய நீ சிறியேனுக்கு எளிவந்து ஆண்ட அருமையை நான் அறியமாட்டேன் துன்பக் கடலில் அழுந்தும்படி என்னை இங்கே விட்டுவிட்டு உன்னைப் பிரிந்தறியாத அன்பர்களோடு நீ மறைந்துவிட்டாய் இது என் குறையே என்று பலவாறாக இரங்கினார்.

மதுரையிலிருந்து உடன் வந்த ஏவலாளர்களைப் பார்த்து ஆடித்திங்களின் முடிவில் குதிரைக் கூட்டங்கள் வரும் என அரசனுக்கு உணர்த்துங்கள் என்று அவர்களை அனுப்பினார் வாதவூரர். அவர்கள் அரிமர்த்தன பாண்டியனிடம் அதனை அறிவிக்க அவன் குதிரைகளின் வரவை நோக்கி எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். திருப்பெருந் துறையில் வாதவூரடிகள் குதிரை வாங்கக் கொண்டுவந்த பொருளை எல்லாம் குருந்தடி உறையும் பெருந்துறை வள்ளலின் பூசைக்கும், திருவிழாக்களுக்கும், கோயிற் பணிக்கும், சிவனடியார்களுக்குமாகச் செலவிட்டுக் கொண்டு நாட்களைக் கழித்து வருவாராயினர்.

குறித்தபடி ஆடி மாதத்திற் குதிரைகள் வராததைக் கண்ட பாண்டியன் ஒரு ஓலை யெழுதி ஏவலாளர் மூலமாகத் திருவாதவூரடிகட்கு அனுப்ப, அதனைப்பெற்ற சுவாமிகள் பெருந்துறைப் பெருமான் திருமுன்னர்த் தாழ்ந்தெழுந்து "அரசனுக்குக் குதிரைகள் அளிப்பது எவ்வாறு" என்று இறைஞ்சினர். அப்போது குதிரைகள் விரைவில் வந்து சேருமென்று அரசனுக்கு ஓலை அனுப்புக" என்று ஒரு அசரீரி வாக்கெழ, அவ்வாறே சுவாமிகள் ஓலையனுப்பினர். அன்றிரவு அவரது கனவில் இறைவன் குருந்தடியில் இருந்த கோலங் காட்டி எழுந்தருளி நின்று "அரசன் மனங்கவரும் அரிய பரிசுகளைக்கொண்டு நாம் மதுரைக்கு வருகின்றோம் நீ முன்னதாக அங்கே செல்வாயாக" என்று அருள் செய்தார்.

மணிவாசகர் மறுநாட் காலையில் புறப்பட்டு மதுரைக்கு வந்து பாண்டிய மன்னனைக் கண்டார். மன்னன் குதிரை வாங்கக் கொண்டு சென்ற பொன் எவ்வளவென்றும் வாங்கிய குதிரைகள் எவ்வளவென்றும் அவரைக் கேட்க அவர் "இரண்டும் அளவில்

அடங்காதன" என்று கூறினர். அது கேட்டுப் பாண்டியன் பெருமகிழ்ச்சி யடைந்து வாதவூரருக்கு வரிசைகள் பல வழங்கிச் சிறப்புச் செய்தான். சுவாமிகள் திருவாலவாய்த் திருக்கோயிலை யடைந்து வணங்கி அரசன் மகிழும் புரவிகள் வரும் வண்ணம் பிரார்த்தித்துத் தமதிருக்கையை அடைந்தார்.

அவரது உறவினரும், நட்பாளரும் பிறரும் ஒருங்கு கூடி அவரிடம் வந்து "அரசனது பொருளையெல்லாம் அரன் பணிக்காக ஆக்கி விட்டுக் குதிரைகள் வருமென்று அரசனிடம் சொல்லியிருக்கின்றீர் இது முறையோ" என்று கேட்டனர் வாதவூரடிகள் அவர்களை நோக்கிச் "சிவபெருமான் ஆசாரியத் திருக்கோலத்துடன்வந்து என்னை ஆட்கொண்ட அந்தவேளையிலேயே சுற்றந் தொடர்புகளைந் துறந்து விட்டேன். துன்ப இன்பங்களையும் உடல் மானத்தை யும் நீங்கி விட்டேன். செல்வப் பொருளை வெறுத்து விட்டேன். சினத்தையும் செறுக்கையும் பகைத்து விட்டேன். கொடிய நல்வினை தீவினைகளை ஒழித்து விட்டேன்.

அதனால் எனக்கு இன்றே இறப்பு வரினும் வருக; அல்லது வாழ்வு நிலையாயினும் ஆகுக! அரசன் ஒறுத்தாலும் ஒறுக்க! அல்லது உவகை ஊட்டினாலும் ஊட்டுக. விண்ணுலகிற் சென்று சிறப்படையினும் அடைக! அல்லது கொடிய நரகம் சென்று சேரினும் சேருக! எங்ஙனமாயினும் சிவ பெருமானின் திருவடிமலர்களை இமைப் பொழுதுகூட நான் மறக்கமாட்டே னென்று கூறினார்

மறுநாள் அரசன் வாதவூரடிகளை யழைத்து குதிரைகள் இன்னும் வந்திலவே யென்று கேட்க இன்று முதல் மூன்று நாட் களுக்குள் வந்துவிடுமென்று அவர் சொன் னார். மூன்று நாட்களும் கழிந்தன. குதிரை கள் வந்து சேரவில்லை. அரசனுக்குப் பெருங் கோபம் மூண்டது. ஏவலாளரை அழைத்து வாதவூரரை யொறுத்துப் பொருள் முழு வதையும் வரப்பற்றுங்கள் எனக் கட்டளை யிட்டான். அவ்வாறே அவர்கள் வாத வூரரை அழைத்து வந்து அரசன் பொரு ளுக்கு வகைசெய்யும்படி கூறி அவரது தலை யில் கல்லை ஏற்றியும் கை கால்களில் கிட்டி

களைக் கட்டி நெருக்கியும் துன்புறுத்தினர் கள். மெய்யன்பர்களுக்கு வரும் துன்பங் களைத் தமதென ஏற்றுத் தாங்கும் ஆண்ட வன், அடிகளுக்கு வந்த துன்பங்களை ஏற்று அருள் புரிந்தான். இரவு வந்தது. ஏவலா ளர் சுவாமிகளைச் சிறைச்சாலையிலிட்டுப் பூட்டி வைத்தனர். வைகறைப் பொழுதில் கயல் நெடுங்கண்ணியுடன் எழுந்தருளி யிருக்கும் சோமசுந்தரக் கருணை வெள்ளத் தின் சிகரங்களை நோக்கிக் கைகூப்பி வணங்கிச் சுவாமிகள் தித்திக்குந் திருவாச கங்களைப் பாடினர்.

சொக்க நாயகன் நந்திதேவர் முதலிய கணநாதர்களை அழைத்து "ஆவணி மூல நாள் வந்துவிட்டது. காட்டிலுள்ள நரிகளை யெல்லாம் பிடித்து வந்து குற்றமற்ற குதி ரைகளாக ஆக்கி அவற்றை நடத்தும் சேவ கர்களாக நீங்கள் கோலங்கொண்டு மது ரைக்கு வந்து சேருங்கள். யாமும் குதிரைச் சேவகர் என்று எம்மை யாவரும் மதிக்கும் படி அங்கே வந்து சேருவோம் என்று பணித்தருளினர். இறைவனது ஆணைப் படி கணநாதர்கள் குதிரைச் சேவகர்களாகி

நரிகளைப் பரிகளாக்கி அவற்றின் மேலேறிக் கொண்டு மதுரையை நோக்கி வந்தார்கள். அவர்களுக் கிடையில், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு கால்களேயும் ஞானகாண்டம் கருமகாண்டம் என்னும் இரண்டு செவிகளேயும் பரஞானம், அபர ஞானமென்னும் இரண்டு கண்களேயும் விதி யாகிய முகத்தையும் விலக்காகிய வாலேயும் சிவாகமங்களாகிய மேலலங்காரங்களேயும் அவற்றிற் கூறப்பட்ட மந்திரங்களாகிய சதங்கை சிலம்புகளேயும் சோம சூரியர்களா கிய அங்கவடிகளேயும் பிரணவமாகிய கடி வாளத்தையும் உபநிடதங்களாகிய முதுகுத் தவிசையும் கொண்ட வேதமாகிய வெள் ளேப் புரவியில் ஏறி வாதவூரர் பொருட்டாக மட்டுமல்லாமல் பாண்டியமன்னனேயும் ஆட் கொள்ள வேண்டுமெனத் திருவுளங் கொண்டு கயிலாயபதியாகிய சிவபெருமான் குதிரைச் சேவகர்களின் தலைவனுக எழுந் தருளினுன்.

ஞான வாளேத் திருக் கரத்தில் தாங்கிச் சாய்ந்த கொண்டை முடித்து நவரத்தின கண்டியும் வாகு வலயமும் குண்டலங்களும்

அணிந்து திருநீற்று நுதலும் வெள்ளை ஆடையும் விளங்கத் தலைமைதாங்கி வேதப் பரியை நடத்தி வரும் மதுரை நாயகனைச் சூழ்ந்து கண் கவர் வனப்பினவாக எண்ணற்ற குதிரைகள் சேவகர்களால் நடத்தி வரப் பெறுவதை மதுரை மக்கள் கண்டு அதிசயமும் ஆனந்தமும் அடைந்தனர். அரண்மனைக்குச் சென்று அரசனிடம் இதனை அறிவிக்கும்படி வாயில் காவலருக்குத் தெரிவித்தனர். குதிரைகள் வருவதைத் தொலைவிலே கண்ட மன்னன் வாதவூரரை விடுவித்துக் குதிரைகளை வரவேற்க அரண்மனை வாயிலுக்கு வந்தான்.

குதிரைச் சேவகர் தலைவர், அரசனுக்குக் குதிரைகளின் கதி, சாரி, நடை ஆகியவற்றைக் காண்பித்து மகிழ்வித்தார். அசுவ இலக்கணங்களைத் தெளிவாக அவனுக்கு எடுத்துக் கூறித் தாமேறி வந்த வேதக் குதிரையொன்று நீங்கலாக ஏனைய நரிக் குதிரைகளெல்லாவற்றையும் மூவரும் அறியாத முதல்வர் பாண்டிய மன்னனிடம் கயிறு மாறிக் கொடுத்தார். குதிரைகள் லாயத்திற் சேர்க்கப்பெற்றன. பாண்டியன்

குதிரை வாணிகருக்கு வெள்ளாடையொன்றைப் பரிசிலாகக் கொடுக்க அவர் குதிரையினின்றும் இறங்கி வந்து அதனை வாங்கித் தமது திருமுடியிற் சூட்டிக் கொண்டார் மற்றைக் குதிரைச் சேவகர்களுக்கும் வெவ்வேறு நிற ஆடைகளைப் பாண்டியன் வழங்கினான். குதிரைச் சேவகர்கள் அரசனிடம் விடைபெற்று மறைந்தார்கள்.

அன்று இராப்பொழுது வந்தது. நள்ளிருளில் குதிரை லாயத்திலிருந்த நரிக் குதிரை அனைத்தும் மீண்டும் நரிகளாக மாறி ஊளையிட்டன. கட்டுக் கயிறுகளைக் கடித்துச் சிதைத்து வெளிப்பட்டு மற்றைக் குதிரைகளையும் ஊறு படுத்தி அங்குமிங்குமாக ஓடியாடித் திரிந்தன பரிக்காவலர்கள் எவ்வளவோ முயன்றும் அவற்றின் கொட்டம் அடங்கினபாடில்லை குதிரைக் காவலர் அரண்மனைக்குச் சென்று அரசனிடம் இரவு நிகழ்ச்சிகளை அறிவித்தார்.

கேட்ட பாண்டியன் கடுஞ்சினங் கொண்டு தண்டலாளரை யழைத்து வாதவூரரை மீண்டும் ஒறுக்கும்படி கட்டளையிட

அவர்கள் அவரைக் கொடுமை செய்யத் தொடங்கி நடுப்பகலில் வெய்யிலில் நிறுத் திக் கைகளிலும் சிரசிலும் கற்களையேற்றிச் சுமக்கச் செய்து துன்புறுத்தினர்கள். வாத வூரடிகள் திருவாசகப் பாடல்களால் சிவ பெருமானைத் துதிக்க, அவர் சுவாமிகளது பெருமையை உலகத்தார்க்கு அறிவிக்கவும் தமது முடிமேல் வைகையாற்று மண்ணைச் சுமக்கவும் வந்தியம்மைக்கு முத்திப் பேறு கொடுக்கவும் திருவுளங்கொண்டு வைகை யாற்றில் பெருவெள்ளம் வரும்படி அருள் செய்தார்.

நகர மக்கள் அனைவரும் வைகை நதிக் கரையில் திரண்டு கூடி வெள்ளத்திற்கு அணை போடுவதில் பெரிதும் ஈடுபட்டார் கள். மதுரை நகரத்தின் தென்கீழ்த் திசை யில் வயது முதிர்ந்த நரை மூதாட்டி வந்தி யென்பவள், வாழ்ந்து வந்தாள். தாயில்லா தவர்களுக்குத் தாய் போன்று விளங்கிய அவள், சுவைமிக்க பிட்டு வாணிபத்தினுல் வாழ்க்கை நடத்தினுள். நாடோறும் அவிக் கும் பிட்டை ஆலவாயண்ணலுக்கு அன்பி ஞல் அருத்திய பின்னரே விற்கத் தொடங்கு வது அவள் வழக்கமாயிருந்து வந்தது.

ஆற்றங்கரையில் அவளுக்கு அளந்துவிட்ட பங்கை அடைப்பதற்கு ஆள் கிடைக்காமல் மனம் நொந்து ஆலவாயண்ணல் திருவடிகளைச் சிந்தித்து "எந்தையே! பிட்டு விற்றுண்டு இன்று வரை எந்தக் கவலையுமில்லாது இன்பமாக வாழ்ந்து வந்தேன். இப்பொழுது அரசியலார் இட்ட கட்டளைப்படி அவர் சீற்றம் கடுகுமுன் ஆற்றங் கரையை அடைக்கக் கூலியாளில்லாது வருந்துகிறேன்" என்று விண்ணப்பித்தாள்.

சொக்கேசர், அழுக்கடைந்த பழந்துணியொன்றை அரையிலே கட்டித் தலையில் சும்மாடும் அதன்மேற் கூடையும் கொண்டு தோளில் ஒரு மண் வெட்டியைத் தாங்கி அடங்காத பசியையுடையவர் போலப் புறப்பட்டு வந்தியம்மையார் வாழுந் திருவீதியை அடைந்து கூலிகொடுத்து வேலை கொள்வாருண்டோ என்று ஓலமிட்டு உரை பரப்பினர். இதைக் கேட்ட வந்தியம்மையார் மனக் கவலை நீங்கி அவரை விளித்து எனக்களந்த கரையை அடைத்துத் தருவாயோ எனக் கேட்டார். கூலியாளாக வந்த கோமான் அதற்கிடுங் கூலி யாது என்று கேட்கப்

பிட்டுத் தருவேனென்று அம்மையார் உரைத்தார் பெருமான் பசியால் இளைத்திருக்கின்றேன். உதிர்ந்த பிட்டைத் தந்தால் உண்டு இளைப்பாறி உனது கரையை அடைப்பேன் என்று வேண்ட வந்தியம்மையார் பிட்டுணவை அவருக்கு வழங்கினர். இறைவனர் அவர் கொடுத்த பிட்டை முன்றனை விரித்து வாங்கிச் சுவைத்து உண்டு வேலை செய்வதாகச் சொல்லி வைகைக் கரையை அடைந்தார்.

அங்கே வேலை ஏவிக் கொண்டிருந்த அரசனது ஏவலாளர்களிடம் வந்தியின் கூலி ஆள் தான் என்று ஏட்டில் எழுதிக் கொள்ளும்படி செய்து கரையடைப்பவரைப் போல மண்ணை வெட்டுவதும் முடியின் மேல் வைப்பதும் வெட்டிய இடத்திலே கொட்டுவதும், சும்மாட்டை அவிழ்த்துத் தட்டுவதும், அதனைத் தலையிலே படியக்கட்டுவதும் ஆகிய விளையாட்டுக்களைச் செய்து விட்டு ஒரு மரத்தடியிற்சென்று தூங்குபவர்போல நடித்தார். பிறகு துயிலுணர்ந்து எழுபவர் போல எழுந்து ஆடினர். இசைப் பாடல்களைப் பாடினர். அங்குமிங்குமாக ஓடினர்.

வேலை செய்து வருந்தி இளைத்தவர் போல மீண்டும் வந்தியம்மையிடம் சென்று "பசி மிகுந்துள்ளது அன்னையே! விரைவில் பிட்டு அளிப்பாயாக" என்று வேண்டி அவளளித்த பிட்டை உண்டு மறுபடியும் வைகைக் கரையை அடைந்து கரையடைப்பதிற் கவனம் லுெத்தாமல் மீண்டும் மீண்டும் பலப் பல விளையாடல்களைச் செய்து கொண்டிருந்தார். அரசனது ஏவலாளர்கள் வந்தியம்மையின் பங்கு அடைபடாது இருப்பதைப் பார்த்துக் கோபங்கொண்டு கூலி ஆளை நோக்கி அந்தப் பங்கை ஏன் அடைக்கவில்லை என்று கேட்கக் கூலி ஆள் ஒன்றும் விடை கூருதிருந்தனர். ஏவலாளர் கைக் கோல் கொண்டு ஒச்சிப் பயத்திலும் பின்னர் நயத்திலுமாக எவ்வளவோ சொல்லியும் கூலி ஆள் வேலை செய்ய முற்பட வில்லை.

இந்த வேளையில் வைகைக் கரையில் எல்லோருடைய பங்குகளும் அடைபட்டதைப் பார்த்து வர விரும்பிப் பாண்டியன் அமைச்சருடன் அங்கு வந்தான். எல்லோருடைய பங்குகளும் அடைபட்டிருக்க வந்தியின் பங்கு அடைப்பாரின்றி நன்ருக

அடைக்கப் பெற்ற அடுத்தவர் பங்கையும் அழித்துச் செல்கின்ற வெள்ளத்துடனிருப் பதை அரசன் கண்டு வந்திக்குக் கூலி ஆளாக வந்த பெருமானைக் கைதொட்டு இழுத்து உள்ளும் புறமும் கீழும் மேலுமாய் உயிர்கள் தோறும் ஒளித்து நின்ற கள்வனு கிய அவனது முதுகில் பொற்பிரம்பு கொண்டு அடித்தான். எங்கும் நிறைந்த பேரொளிப் பிழம்பாகிய இறைவன் கூடையிலிருந்த மண்ணை உடைப்பிற் கொட்டி மறைந்தான்.

பாண்டியன் அடித்த அடி அண்ட பிண்ட சராசரங்கள் அனைத்திலும் பட்டது. கூலியாள் கொட்டிய ஒரு கூடை மண் கரையையுயர்த்தி வெள்ளத்தைத் தடுத்தது. வந்தியம்மையின் பேரன்புக்குச் சொக்கேசர் எளிவந்து கூலியாளாகி மண் சுமந்து பிரம் படிபட்ட பெருங்கருணையை யாவரும் போற் றித் தொழுதனர். ஆகாயத்தில் நந்தியம் பெருமான் முதலிய கணநாதர்கள் ஒரு விமானத்துடன் வந்து வந்தியம்மாளை அழைத்துச் சென்று சிவபுரத்திற் சேர்த் தார்கள்.

பாண்டியன் இந்த அதிசய நிகழ்ச்சி யைக் கண்டு, வியப்புற்று நிற்கும் வேளையில் "மன்னனே! உனது பொருள்களெல்லாம் அறத்தாற்றில் ஈட்டப் பெற்றவை. ஆத லின் அவற்றை நமக்கும், நம்மைச் சேர்ந்த வர்களுக்கும் வாதவூரன் உதவினன். நீ அவனை ஒறுத்தாய். அதனுல் காட்டு நரி களைக் குதிரைகளாக்கித் தந்தோம். மீண் டும் அவைகள் நரிகளாயின. அது பொருது மறுபடியும் அவனைத் துன்புறுத்தினய்! வைகையில் நீர் பெருக வைத்தோம். வந்திக்குக் கூலி ஆளாய் வந்து அவள் தந்த பிட்டைஉண்டு உன் பிரம்பாலடிபட்டு, அவளுக்கு நற்கதியை வழங்கினேம்; இவை யனைத்தும் இவனுக்காகச் செய்யப் பெற்ற னவே. இவனை இனி இவன் இச்சைப்படி வாழவிட்டு நீ இன்பமாக வாழ்வாயாக" என்று ஒரு அசரீரி வாக்கு எழுந்தது. கேட்ட பாண்டியன் அச்சம் மிகுந்து வாதவூரரை அடைந்து தன்னை மன்னித்து அருளும்படி பிரார்த்தித்தான். சுவாமிகள் அரசனுக்கு அருள் முகம் கொடுத்துத் தில்லையிற் சென்று தங்க வேண்டுமென்னுந் தமது விருப்பத்தை அவனிடம் தெரிவித்து ஆல

வாய்ப் பெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு வழியிலுள்ள பல தலங்களையும் வழிபாடு செய்து திருத்தில்லைப் பதியைச் சென்று சேர்ந்து அம்பலக் கூத்தர் திருக் கோலம் கண்டு தெரிசித்துத் திருவாசகத் திருப்பாடல்களைப் பாடிக்கொண்டு இன்புற் றிருந்தார்.

ஈழ நாட்டில் புத்தமதச் சார்புடையவர் கள் சிலர் சிதம்பரத்துக்கு வந்து தில்லை மூவாயிரவர்களுடன் விவாதம் செய்ய நாள் குறித்தார்கள். கூத்தப் பெருமான் தில்லை வாழந்தணர்களின் கனவில் தோன்றி "வாதவூரனை விடுத்து வாது செய்வீர்" என அருள்செய்தார். அங்ஙனமே மாணிக்க வாசக சுவாமிகளிடம் கூத்தப் பெருமான் கட்டளையைத் தில்லை வாழந்தணர்கள் தெரி வித்து அவரை அழைத்துக்கொண்டு வந்து விவாத மண்டபத்தில் எழுந்தருளுவித்தார் கள். சுவாமிகள் அவர்களிடம் வாதிட முற் பட்டுச் சில வினாக்களை எழுப்ப அவர்கள் பொருந்தாத விடைகளைச் சொல்லிச் சுவாமிகளை நோக்கிச் சில வினாக்களை எழுப் பினார்கள் அவ்வினாக்கள் அனைத்திற்கும்

அவையிற் கூடியிருந்த அறிஞர்கள் அனைவரும் ஏற்கத் தக்க விடைகளைச் சுவாமிகள் சொல்லப் புத்தர்கள் விவாதத்தில் தோல்வி அடைந்தனர். ஈழ நாட்டுப் பௌத்த மன்னன் அங்கே இவர்கள் தோற்றதைக் கேள்வியுற்று ஊமையாயிருந்த தனது மகளை அழைத்துக்கொண்டு சிதம்பரத்திற்கு வந்து மாணிக்கவாசக சுவாமிகளிடம் அவளது ஊமையை ஒழித்தருள வேண்டுமெனப் பிரார்த்தித்தான். சுவாமிகள் எடுத்த பொற்பாதத்தைச் சிந்தித்துப் "பூசுவதும் வெண்ணீறு" என்ற தலைப்பையுடைய திருச்சாழல் பதிகத்தின் முன்னிரண்டு வரிகளை இறைவன் கீர்த்திபற்றிய வினாக்களாகப் பாடியருள, அந்நங்கை அப்பாடல்களின் பின்னிரண்டு அடிகளை விடைப் பகுதிகளாகத் தெரிவித்து மூங்கை நீங்கப் பெற்றாள். மன்னனும் தில்லைவாழந்தணரும் உடனிருந்த அடியார்களும் இதனைக் கண்டு பெருமகிழ்ச்சியுற்றனர். பௌத்த மன்னன் சைவனானான்.

கூத்தப் பெருமான் தமிழ்நாட்டில் திருவாசகத்தைப் பரவச் செய்ய வேண்டும்

என்னும் பெருங்கருணையினுல் அந்தண வடிவம் கொண்டு, சுவாமிகளிடத்து எழுந்தருளி வந்து "நீர் பாடிய திருவாசகங்களை எழுதிக் கொள்ளுவதற்காக வந்தேன்; அவைகளைச் சொல்ல வேண்டும்" என்று கேட்க, சுவாமிகள் அப்பாடல்கள் அனைத்தையும் சொல்லினர். இறைவன் அவற்றை எழுதிக் கொண்டு பரமசிவன் பேரில் கோவை ஒன்று பாடித்தரும்படி அவரிடம் வேண்டி அவர் சொல்ல அதனையும் எழுதிக் கொண்டு இறுதியில் திருவாதவூரன் சொல்லத் திருச்சிற்றம்பல முடையான் எழுதியது என்று கைச்சாத்திட்டுக் கனக சபையில் வைத்து மறைந்தார். சுவடியைக் கண்ட தில்லை வாழந்தணர்கள் பெருவியப்படைந்து சுவாமிகளிடம் சென்று பாடல்களுக்குப் பொருள் அருளிச் செய்ய வேண்டும் என்று வேண்டச்சுவாமிகள் இவற்றின் பொருள் கனகசபேசனே என்று கூத்தப் பெருமானைச் சுட்டிக்காட்டி ஒரு ஆனி மாத மக நாளில் சிவத்தோடு இரண்டறக் கலந்தார்.

திருச்சிற்றம்பலம்

"என்று மின்பம் பெருக மியல்பினே
டொன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்"

— சேக்கிழார் சுவாமிகள்.

திருச்சிற்றம்பலம்.

